# விப்ர நாராயண



வசனம்-பாடல்கள்



விலை 8 அணா

## — நடிகர்கள் —

| | | |
|---|---|---|
| பானுமதி | ... | தேவதேவி |
| நாகேஸ்வர ராவ் | ... | விப்ரநாராயணர் |
| ரேலங்கி | ... | ரங்கராஜன் |
| வி. சிவராம் | ... | உறையூர் மன்னர் |
| ருஷ்யேந்திரமணி | ... | ரங்கநாயகி |
| சந்தியா | ... | மதுரவாணி |
| குமாரி விமலா | ... | சரசா |

மற்றும் பலர்



**பின்னணி**

[illegible]. [illegible]. ராஜா, [illegible]. ரத்னம்,
செல்லமுத்து



| | | |
|---|---|---|
| வசனம் | ... | உதயகுமார் |
| பாடல் | ... | எஸ். டி. சுந்தரம் |
| சங்கீதம் | ... | ராஜேஸ்வர ராவ் |
| நடனம் | ... | எல்லப்பா<br>பசுமர்த்தி கிருஷ்ண மூர்த்தி |
| ஸ்டுடியோ | ... | பரணி |
| தயாரிப்பு | ... | பரணி பிக்சர்ஸ், சென்னை |

# விப்ரநாராயண

## வசனம்—பாடல்கள்

---

(ஸ்ரீரங்கநாதரின் சந்நிதானத்தை அர்ச்சகர்கள் திறக்கிறார்கள். விப்ரநாராயணன், ரங்கராஜன் இருவரும் பாடிக்கொண்டே வருகிறார்கள்)

(சூட தீபாராதனை முடிந்து பிரசாதம் வாங்கிக் கொண்டு)

விப்ர: ஸ்ரீரெங்கா, ஜெகன் மோகனவா, நான் உன் கீழ்ப் படிந்து உன்னையே திக்கெட்டும் நம்பியுள்ளேன். என் பாவங்களை மன்னித்துக் கடை சேர்த்திடுவாய், காவேரி ரங்கா!....

(விப்ரநாராயணனும் ரங்கராஜனும் கோயிலைவிட்டு வெளியேறும் போது)

விப்: ரங்கா ... ரங்கராஜா.......

ரங்க. அடியேன் சுவாமி....

விப்: நின்றுவிட்டாயா அப்படியே?

ரங்க: கண் பார்க்கக் கூடாதவை நேரே வந்ததால் கண்ணை மூடிக்கொண்டேன் சுவாமி!

விப்: மகா தவறு. மூடவேண்டியது மனத்தையே தவிர முகத்தையல்ல. மனம் மட்டும் சுத்தமாக இருந்தால் எதைப்பற்றியும் கவலை இல்லை. எல்லாம் ரெங்கநாதன் செயல்....

ரங்க: சித்தம் சுவாமி...

(இருவர் தனியே)

ஒருவர்: பண்டிட் ஜீ...ஓ பண்டிட் ஜீ... அந்த சுவாமி யாரு பாபு?

மற்ற: அவரா? ஸ்ரீரங்கநாதரையே சதா சர்வ காலமும் சேவிச்சிக்கிட்டிருக்கும் விப்ரநாராயணர். கிராமத்தை விட்டு இங்கு வந்து எல்லாம் அவரே என்று ஆலாபனம் செய்கிறார். ஸ்ரீரங்கநாதருக்கே மகா கைங்கர்யம் செய்கிறார். மகானுபாவர் அவர்!

ஒருவர்: இல்லாதபோனா உன் மாதிரி மகான்க கூட கீழே விழுந்து வணங்குவாங்களா? அதான் கேட்டேன். சரி! மனைவி மக்கள் இருக்கிறார்களா?

மற்ற: அந்தவித எந்தத் தொடர்புமில்லாமல் பிரம்மச்சாரியாகவே இருக்கிறார்.

ஒருவர்: இந்தச் சிறு வயதிலேயே பிரமச்சரிய விரதம் கொண்டிருக்கும் அவருக்கு போஜனம்?

மற்ற: அவருக்கு நிஷ்டை கிடைக்கிறது. இத்தனைபேரும் சுவாமிகளின் அபிமானியாய் இருக்கும் போது சுவாமிகளுக்கு போஜனத்துக்கு என்ன குறை சுவாமி!

ஒருவர்: சுவாமிகள் இருக்கிறது எங்கே பாபுஜீ?

மற்றவர்: காவேரி நதி தீரத்திலே இருக்கு! அங்கே ஒரு சிறிய தோட்டமும் போட்டிருக்கார். அங்கே தான் இவர் ஆஸ்ரமமும் இருக்கு! ரங்கநாதரின் பூஜைக்கு அங்கு இருந்துதான் மலர் கொண்டு வருகிறார்.

*　　　*

(ஸ்ரீரங்கநாதரும் லெட்சுமியும் வான வீதியில்)

லட்சுமி: நாதா!

ரெங்க: என்ன தேவி?

லட்சுமி: ஆசி பந்தம் எல்லாம் ஒழித்து சர்வேஸ்வரன் நாமம் ஒன்றே என்று சதா சர்வ காலமும் இரவு பகல் என்றும் பாராமல் தவம் கிடக்கிறாரே அந்த பக்தர், அவர் இன்னும் எவ்வளவு நாள் தவிக்கணும் சுவாமி?

ரெங்க: அவர் நம்மை அடையும் நாள் நெருங்கி விட்டது தேவி.

* *

(ஆண்டவன் சந்நிதானத்தில் தேவதேவியின் நாட்டிய அரங்கேற்றம் நடைபெறுகிறது. ரசிக கோடிகள் ரசித்துக் கொண்டிருக்கின்றனர். நடனம் முடிந்ததும் குருவுக்குக் காணிக்கை சமர்ப்பிக்கின்றனர். அப்போது கலா தேவர் எழுந்து)

கலாதேவர்: கண்களுக்கு இனிமையான அற்புத சௌந்தர்யம், அழகுக்கு மெருகு தரும் நாட்டிய சாதுர்யம் தங்க ரோஜாவுக்கு மணம் தருவதுபோல் உள்ளது. இதுவரை இந்த மாதிரி சந்தர்ப்பம் கிடைத்ததே யில்லை!

(அவர்கள் கோயிலைவிட்டு வெளியேறப்போகும் சமயம்) தாங்கள் வசிப்பது எந்த ஊரம்மா?

தேவ தேவி: திருக்கரம்பனூர்.

கலாதேவர்: அப்படியா?

* *

[சரசாவிடம் ஒருவன்]

ஒருவன்: சரசா... சரசா........

சரசா: என்ன?

ஒருவன்: உன் நாட்டியம் எப்போ?

சரசா: சாமிகள் தயவு கிடைச்ச அப்புறம்............ ஆயா... சக்கரைப் பொங்கல் தர்றீயா?

ஒருவன்: சாயங்காலம்.

[சோழ அவையில்]

மன்னன்: நம் நாட்டின் கீர்த்திக் கென்றும் குறைவில்லை: ஆதலால்தான் ஒரு மகாபரிசுத்தர் ரெங்க நாதவாசர் இந்த லோகத்தில் அவதரித்துள்ளார். அவரைத் தரிசிப்பதைப் பூர்வ புண்ணியமாகக் கருத வேண்டும்.

மந்திரி: சுவாமிகள் நம் வசமாகி சோழ மண்டலமே கீர்த்தி யடைகிறது.

மன்னர்: பச்சிளம் பிராயத்திலேயே இந்த மாதிரி பாவித்தியம் ஏற்பட்டது நம் நாட்டுக்குப் புண்ணியம்.

கலாதேவர்: (வந்து கொண்டே) மற்றும் ஒரு கலா தேவி நம் நாட்டிற்குக் காணிக்கையாகக் கிடைத்திருக்கிருள் மன்னவா.

மன்னர்: கலாதேவர் எங்கோ மனோகர நாட்டியத்தைக் கண்டு களித்திருக்கிருர் போலிருக்கிறது.

கலாதேவர்: திருக்கரம்பனூரில் வாசம் செய்யும் ஒரு தேவதாசி தேவ ரம்பைகளேயும் தோற்கடிக்கும் வனப்பு மிகுந்தவள்...

மன்னர்: அவள் பெயர் என்னவோ?

கலாதே: தேவதேவி. இன்று ரங்கநாதர் சந்நிதானத்திலே அவள் ஆடலைக் கண்டேன். பாட்டிலே களிப்புநாட்டியத்திலே தீர்ப்பு இதுபோல் நாம் எங்குமே கண்டதில்லை மன்னவா.

மன்னர்: அத்தனை அபூர்வ நாட்டியத்தை, நடன ரமணியை அவசியம் காண வேண்டும். அரண்மனைக்கு அழைத்து வாருங்கள். நாட்டியத்திற்கு ஏற்பாடு செய்யுங்கள்....

கலாதே: ஆகட்டும் அரசே!

(மதுர வாணியும் தேவ தேவியும்)

மதுர: அழகுன்னு நீயேதான். சந்திரனே வாயென்றாலும் உன்னைக் கண்டு வரமாட்டான். இந்த ரதி தேவியை அவமதிக்க இந்த அவனியில் யாரும் கிடையாது. உன் அழகுக்கு புண்ணிய உபசாரம்செய்வார்கள்!

தேவ: பெரியவர்கள் என்ன சொன்னாலும் தகும். நான் என்ன அவ்வளவு அழகாக வா இருக்கிறேன்?

மதுர: என் பேச்சில் நம்பிக்கையில்லை யென்றால் ஒரு ரசிகனைக் கூப்பிட்டு உன் அழகை மதிப்புப் போடச் சொல்லு.

தேவ: உன் பேச்சி தகுமக்கா!

மதுர: அம்மா அந்த மதிப்பையே கண்ணாடி அறையில் போட்டுப் பூட்டிக் கொள்வாள்.

(சேவகர்கள் வருகை)

சரசா: யார் நீங்கள்?

சேவக: ராஜ தூதர்கள்.

சரசா: தூதர்களா? யாருக்காக? என்ன சொல்லுகிறீர்கள்?

சேவக: உனக்காகவே.

சரசா: அம்மாடி யோ....எனக்காகவா? அம்மா.... அம்மா......

ரங்கநாயகி: என்னடி அது?

சரசா: தூதர்களாம், பிடிச்சிட்டுப் போகவாம்.

ரங்கநாய: ஹா........

சரசா: அம்மா....அம்மா...பயமா இருக்கே.

ரங்கநாய: யாரடி அது?

சரசா: நான் என்ன செய்வேன் அம்மா. பயமா இருக்கே!

ரங்கனுய: வாங்க...வாங்க....வாசல்ல நிற்கிறீர் களே! உள்ள வாங்க...இந்த பொண்ணுக்கு ஒண்ணும் தெரியாது....நிழலைப் பார்த்தே பயந்துருவா.... விபரம் ஒண்ணும் தெரியலயே. விஷயம் கேட்கவே மறந்துட் டேன்....

சேவகன்: ராஜாதி ராஜ ஸ்ரீ ஸ்ரீ உறையூர் மன்னர் சோழ ராஜேந்திரர் அனுப்பினுர்.

ரங்கனு: மன்னர் அனுப்பினுரா? உபத்திரவமே இல்லாம இத்தனை நாள் நாளைக்கழிக்கிறோம் ஒண்ணும் ஆக்ரகம் இல்ல......

சேவகன்: ஆக்ரகம் இல்ல...அனுக்ரகமே...தேவ தேவியின் நாட்டியத்தைக் கண்டு ரசிக்கவே வரச் சொன்னுர்.

ரங்கனுய: மகாராஜாவுக்கு அனுக்ரகம் ஏற்பட் தா? எங்க ஜன்மம் சாபல்யமடைந்தது. ராஜன் பல் லக்கு அனுப்பினு அப்பவே உடனே வந்து வணங் கிக்கிடுறோம். இப்பவே தேவதேவி சபையில வந்து ஆடுவா......

சேவகன்: அதும் கூட பின்னுலயே வந்தாச்சி! நீங்கதான் வரணும்...

ரங்கனுயகி: சரசா! என்ன சும்மா நிக்கிற, வந்த வங்களுக்கு பால் மழும் கொடுத்தாயா? தேவி...தேவி... இன்னைக்கு மன்னர் முன்னுல நாட்டியம் ஆடி பரிசு வாங்கினு...அப்புறம் தங்க மழையா கொட்டப் போ குது......

தேவ: அம்மாவுக்கு எப்பவும் இப்படித்தான்.

மதுர: தேவிக்கு ரத்தின ஹாரமே வந்துட்டார் போல இருக்கு:

தேவி: ஆனுல் இந்த என் ரத்தின ஹாரத்தை விலைக்கு அடைய முடியாது.

(அரச அவையில் நடனம் நடைபெறுகிறது. தேவ தேவி ஆடுகிருள். அனைவரும் கண்டு பரவச மடைகின் றனர். தோகை விரித்தாடும் மயிலாகத் தோன்றுகிருள் அனைவர் கண்களுக்கும். குரலிசையால் அனைவர் உள் ளத்தையும் கொள்ளை கொள்கிருள்)

(அரங்கத்தில் ஆடிய அரம்பை தேவதேவியின் ஆடலைக் கண்டு மன்னர்)

மன்னர்: அபூர்வம்... அற்புதம்... கலாதேவர் கூறி யது அப்பட்ட உண்மை! இவர்களுக்கு இணை இவர் களேதான்! நீங்கள் தேவாம்சம் பொருந்தியவர்கள் தான் சந்தேகமே இல்லை! நாட்டிய ராணி என்ருல் நீங்களே தான்! உங்கள் நாட்டியத்தால் சோழ மண்ட லமே கௌரவமடைகிறது. பிறந்த சோழ மண்டலமும் அதன் தாசன் நாமும் தண்யமடைந்தோம்...

தேவ தேவி: தண்யமடைந்தது நான். இன்று டன் என் கலா சேவை பரிபூரணமடைந்தது.

மன்னர்: இவர்களுக்குத் தகுந்த மரியாதையோடு அனுப்புங்கள்!

சேவ: சித்தம் மகாராஜா.

* * *

(தேவ தேவி பல்லக்கில் வரும்போது எதிரே விப்ர நாராயணரும் ரங்க ராஜனும் வருகிருர்கள்! மக்கள் விப்ர நாராயணருக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய் கின்றனர். அதைக் கண்ட தேவ தேவி)

தேவ தேவி: நிறுத்துங்கள்.......யாரக்கா அவர்?

மதுர: மக்கள் காட்டும் கௌரவமும் மரியாதை யும் தெரிய வில்லையா தேவி! ஸ்ரீ ரெங்க நாதரிடம் தன் வாழ்வை அர்ப்பணம் செய்த பரமபக்தர். விப்ர நாராயண சுவாமிகள்!

தேவ தேவி: அவ்வளவு மகானு?

மதுர: பட்டண மெல்லாம் அவர் பாதத்தில் விழுந்து வணங்குவது கண்டு தெரியவில்லையா தேவி! அரங்க நாதரின் அர்ப்பணமே அவர் ஜீவிய சங்கற்ப மாம்.

தேவ தேவி: மணமாக வில்லையா?

மதுர: இவ்வாறுதான் ஜீவித மெல்லாம் அரங்க நாதருக்கு அர்ப்பணம் செய்து விட்டார். அவருக்கு அரங்க நாதருக்கு சேவை செய்வதே ஜீவித சங்கற்பம். அதிலேயே தெய்வ சங்கற்பத்திலேயே ஆனந்த மயமாகிப் பரவச மடையப் போகிறாராம்!

* * *

(சோலை ஓரம் வந்து)

தேவ தேவி: நில்லுங்கள்...நிறுத்துங்கள். இந்தத் தோட்டம்......

மதுர: யாரோ சொந்தக்காரங்க இது.

ஒருவன்: இல்லை அந்தச் சாமியாருடையது. அவர் இங்கே தான் இருக்கிறார்.

தேவ தேவி: இந்தத் தோட்டம் எவ்வளவு அழகானது. இப்ப நாம சுற்றிப் பார்த்துட்டுப் போகலாமா?

மதுர: இப்போதே நடந்தா பொழுதோட வீட்டுக்குப் போகலாம்.

தேவ தேவி: தடுக்காதே அக்கா! தோட்டம் சுற்றிப் பார்க்க எவ்வளவு நேரம் ஆகும்? வா. அக்கா!

மதுர: சரி உன் பேச்சே உனக்கு. நட...

(தோட்டத்துச் செடியில் ஒரு மலரைக் கொய்கிறாள் தேவ தேவி)

மதுர: பார்க்க வந்தவங்க பார்த்துட்டுப் பேசமா போகணும். பூவைக் கிள்ளாதே!

தேவ தேவி: ஒரு பூவைப் பிடுங்கிக் கொண்டால் என்னக்கா?

மதுர: இதெல்லாம் அரங்க நாதரின் அலங்காரத் துக்காக!

தேவதேவி: இவ்வளவு தூரம் வந்தாச்சி! சும்மா போகக் கூடாது. சுவாமிகளைப் பார்த்து ஆசிர்வாதம் பெற்றுக் கொண்டு போகலாம்.

மதுர: இப்போதே நேரமாச்சி.சுவாமிகள் எப்போ வருவாரோ....போகலாம்....

தேவ தேவி: அதோ சுவாமிகளே வந்தாச்சி! வா போகலாம்!

(இருவரும் அடிபணிந்து வணங்குகின்றனர், விப்ர நாராயணர் பராமுகமாகச் செல்கிறார்)

தேவ தேவி: தவசி....சீ....பிராமணன்....மரியா தை இல்லாதவன். மகான்....இவனை

மதுரம்: தேவி. எதுக்கு இந்த அடாத கோபம்? தேவி சுவாமிகள் கண் எடுத்துப் பார்க்காததற்கா இந் தக் கோபம்?

தேவதேவி: போதுமக்கா! செடி கொடிகளைக் கண் எடுத்துப் பார்க்காமலா இருக்கிறான்! கௌரவம் பக்கம் வந்து விட்டது........நான் வந்து அடிபணிந்தும் கண்எடுத்துப்பார்க்கக்கூடாதா? கையெடுத்து வாழ்த்தத் தான் கூடாதா?

மதுர: தேவி அவர் அப்படிப் பட்டவரல்ல! தெரிந்தும் அவமானம் செய்பவரல்ல!எல்லாம் பரவசம்!

தேவதேவி: பரவசம் வேண்டி எதுவும் இல் லக்கா! எல்லாம் கபட நாடகம்.......

மதுர: ஹரி பக்தருக்கு வேற ஒண்ணும் தெரி யாது........

தேவதேவி: இவன் என்ன தேவலோகத்திலிருந்து வந்த பிரம்ம ரிஷியா? கெளதமா பீஷ்மா இவர்களை எல்லாம் விட மேம்பட்டவனு?

மதுர: அங்க கனத்து அகங்காரத்திலே தூஷிக்காதே! தெய்வத்தை தூஷிக்கிறதும் தெய்வ பக்தரை தூஷிக்கிறதும் ஒன்றுதான்.......

தேவதேவி: என்னைக் கவனிக்காமல் போனது என் நாட்டியக் கலையையே அவமதித்ததாகும்....

மதுர: வீண் அபச்சாரம் பண்ணுதே! தெய்வ நிந்தனை பொல்லாதது....அதன்பலன் கிடைக்காமல் போகாது. பின் நீ தான் அவதிப்படுவாய்......

தேவதேவி: என்னை மிரட்டாதே அக்கா! இந்தக் கபட பிரமாச்சாரிய வேஷாதாரியை ஒரு கைபார்க்கத்தான் போகிறேன்! அவன் கபட நாடகத்தை என்ருவது வெளிப்படு தியேதீருவேன். அகங்காரம் கொண்ட அவன் அவமானத்தால் என்னிடம் மன்னிப்புக் கேட்கச்செய்வேன் வஞ்சகத்தை வஞ்சகத்தால் தான் எடுக்க வேண்டும்! சதியைச் சதியால் தான் வெல்ல வேண்டும்!

மதுர: ஆவேசம் அளவு கடந்தால் ஆபத்து. வீடு சென்ருல் சாந்தமாகிவிடும்! வா சாவகாசமாக பேசலாம்.

[தேவதேவியும் மதுரவாணியும் வீடு நுழையும் போது சரஸா]

சரஸா: நில்லுங்கள். அடி எடுத்துவைக்கக் கூடாது!

தேவதேவி: எதுக்கு ஆர்ப்பாட்டம்?

சரசா: நிறுத்தாட்டா அம்மா கிட்ட திட்டுவாங்கணுமே!

(ரங்கநாயகி வருகை)

ரங்கநாய: ராஜா கண்ணு பட்டா கல்லும் பொடியாகுமுன்னு சொல்லுவாங்க!கைலகாம்பிக்கங்க...

சரசா: அக்கா!

தேவதேவி: என்னடி?

சரசா: ஏன் இவ்வளவு கோபமா பேசுற?

தேவதேவி: இந்தக் கேள்வி யெல்லாம் உனக்கு எதுக்கு?

ரங்கனுயகி: [மதுரத்திடம்] என்னடி போன விபரம்? இந்த தாயிட்ட சொல்லாம என்னடி ஓட்டம்?

மதுரம்: ரொம்ப இருக்கு! இப்ப சாவகாசம் இல்ல! இப்ப சொன்னுலும் விடியாது! வந்த அலுப்பு தீர்ந்த வுடனே சொல்றேன்!

ரங்கனுயகி: அதிசயமா இருக்கே! ஆட்டம் ஆடினவளுக்கு அலுப்பாம். அந்த நாளையில நாங்க! இதுகளைப் போலவா? கச்சம் கட்டி ஏழு இரவு சேர்ந்து ஆடினுக் கூட எதுவுமே தெரியாது,

(சேவகர்கள் வருகை) வாங்க...வாங்க....யாருங்க?

சேவகன்: பிரபுவின் வெகுமானம்!

ரங்கனுயகி: ரொம்ப சந்தோஷம், உள்ள வாங்க உள்ள வாங்க! சரசா கல் எடுத்துட்டுவா?

சேவகன். கல் எதுக்கு?

ரங்கனுயகி: உரசிப்பார்க்கத்தான்! இதெல்லாம் நிஜ தங்கம் தானப்பா?

சேவகன்: அப்போ பித்தளை நகை தர்ருருன்னு பிரபு மேலே சந்தேகப் படுறீயா?

ரங்கனுய: நகைபண்ணினது பிரபு இல்லேப்பா!மற்றவங்களைப் பற்றி நமக்கு என்ன தெரியும்? என்மக நாட்டியத்தைப்பற்றி மன்னர் என்ன சொன்னுர்?

சேவகன்: அவங்களுக்கு ஈடானவங்க இல்லாத தனால மன்னர் அவர்களுக்கு எதும் ஈடே இல்லேன்னு சொன்னார்!

ரங்கநாயகி: அவர் அப்படி சொல்லீட்டா எனக்கு குறையே இல்லையப்பா!

சேவகன்: அதுக்கு சந்தேகமா? மக்களுக்கும் சந் தோஷமுன்னு மன்னருக்கு மட்டுமா.

0 0 0

[தேவதேவி சோலைக்குத் தனியே வருகிறாள். முன் சென்றவை நினைவுக்கு வருகின்றன]

மன்னர்குரல்: அபூர்வம், அற்புதம்! காலதேவன் கூறியது அப்பட்ட உண்மை. இவர்களுக்கு இணை இவர் களேதான். நீங்கள் தேவாம்சம் பொருந்தியவர்கள்தான்! சந்தேகமேயில்லை, நாட்டியராணி என்றால் நீங்களே தான். உங்கள் நாட்டியத்தால் சோழமண்டலமே கௌர வமடைகிறது. பிறந்த சோழ மண்டலமும் அதன் தாசன் நாமும் தண்ய மடைந்தோம்!

தேவதேவி முன்குரல்: அதெல்லாம் நாடகம் அவன் கபட நாடக வேஷத்தை வெளிப்படுத்தியே தீரு வேன். அகங்காரம் கொண்ட அவன் அவமானத்தால் என்னிடம் மன்னிப்புக்கேட்கச் செய்வேன்! வஞ்ச கத்தை வஞ்சகத்தால் தான் எடுக்கவேண்டும். சதியைச் சதியால் தான் வெல்லவேண்டும்.

0 0 0

[தேவதேவி தவவேடம் பூண்டு வருகிறாள். எதிரே மதுர வாணியைக் கண்டு]

தேவி: அக்கா....அக்கா...

மதுர: தேவி.......

தேவ: நான் தானக்கா!

மதுர: இது என்ன வேஷம்?

தேவ: காரியத்தை சாதிக்க.என்னை வாழ்த்தக்கா' மூகூர்த்த வேளை மீறிப்போகுது!

மதுர: எதுக்கு?

தேவி: பேச்சை நிலைநாட்ட,சீக்கிரம் வாக்கா நீ!

மதுர: பிடிவாதத்தை விடமாட்ட?

தேவி: இந்த ஜென்மத்தில் அது நடக்காதக்கா!

மதுர: ஆலோசனை செய்தேவி.அவர் பரம பக்தர்!

தேவி: என் பரீக்ஷையில் ஜெயித்தால் தான் நம்புவேன்!

மதுர: மகான்களுடன் போராடுவது நெருப் போடு விளையாடுவது போல்தான்!

தேவி: தெரிந்தே புறப்பட்டேன். அதன் பலனை மனதார நானே அனுபவிக்கப்போகிறேன். இதுவே என் நினைவு!

மதுர: மனித பலம் தெய்வபலத்தை ஜெயிக்காது!

தேவி: பிரமச்சாரிகளுக்கு ரெங்கநாதர் ஒன்றே நானும் ஒன்றே! நான் ஜெயித்தால் அவனுக்கு என் பெருமையை நிலைநாட்டுவேன். அவர் ஜெயித்தால் அவருக்கு தாசனுகி வைகுண்ட சௌபாக்கியமாக ஏற்றுக் கொண்டு கீழ்ப்படிகிறேன்!

மதுர: திரும்புவது எப்போ?

தேவி: முடிந்த பிறகுதான்!

மதுர: அம்மா கேட்டால்?

தேவ: அமமா கேட்டால் வேண்டுவதைச் சொல் லிச் சாந்தப் படுத்து! சீக்கிரம் திரும்பி வருகிறேன்!

மதுர: ஆண்டவன் நன்றாக ரட்சிக்கணும்!

0 0 0

(சந்நிதானத்தில் பூஜை நடக்கிறது.: விப்ரநாராயணர் ஸ்ரீ ரெங்க பெருமானைப் பார்த்து)

விப்ர: ரெங்கா.......கஸ்தூரி ரெங்கா....காவேரி ரெங்கா... உன் கண்கள் சிவப்பாக நான் என்ன அபசாரம் செய்தேன். ஆவேசம் கொண்டிருக்கிறாரே!......

ரங்கராஜீ: இது என்ன சுவாமி ஏதேதோ சொல்றீங்க? ரெங்க நாதரைப்பற்றி எனக்கொன்றும் தெரியலியே!

விப்ர: உனக்குத் தெரியாது ரெங்கா! என் பெருமான் ஏதோ கோபித்துள்ளார். நான் ஏதோ அபசாரம் செய்துள்ளேன். நான் ஏதோ அபசாரம்செய்துள்ளேன்.

ரங்கராஜீ: மன்னிக்க வேண்டும். எழுந்திருங்கள் சுவாமி. ரெங்கநாதர் தாசர்கள் மேல் விசுவாசம் கொண்டவர். வாசுதேவர் நிச்சயம் மன்னிப்பார். நாளை வந்து பார்க்கலாம் சுவாமி! தீர்த்தம் வாங்கிக் கொள்ளுங்கள் சுவாமி.......வாருங்கள் சுவாமி ஆஸ்ரமம் போகலாம்.

[இருவரும் செல்கின்றனர்]

* * *

[ரங்கநாயகி சரசாவை]

ரங்கநாயகி: சரசா......சரசா...

சரசா: என்னம்மா?

ரங்க: எங்க சின்னவளைக் காணம்?

சரசா: இன்னும் படுக்கையை விட்டு எழலயோ என்னமோ?

ரங்க: பாரேன். எவ்வளவு பொழுதாகிருச்சி. எங்க வயசு காலத்தில இப்படியா இருந்தோம். பொழுதுக்குள்ள காரியத்தை முடிச்சிட்டு மின்னல் போல திரும்பி வருவோம். சீ...சீ...துடப்பங் கூட்றது முதல் ஆராதனை வரைக்கும் நானே தான் செய்ய வேண்டிய

திருக்கு! நான் கண்ண மூடிஞ என்ன ஆகுமோ என்னமோ?

சரசா: அறையிலே இல்லேம்மா!

ரங்க: தோட்டத்தில பார்த்தியா?

சரசா: அங்கேயும் காணம்மா!

ரங்க: எங்க போயிட்டா? ஓடிப்போயிட்டாளோ?

சரசா: போனுளோ என்னமோ?

ரங்க: உனக்கும் ரெக்கை வந்தாச்சில, நீயும் ஓடிப்போயேன். மதுரம் வேற வேலையில்லையா? வீட்டில் காணும எங்க போயிட்டா?

மதுரம்: இங்க எதுக்கு இருக்கா?

ரெங்: பெத்த ஆத்தாகிட்ட சொல்லிக்காம எதுக்குப் போயிட்டா? எங்கே போயிட்டா?

மதுரம்: ஸ்ரீரங்கத்துக்கு!

ரெங்: தாய் கூட இல்லாம தனியே எதுக்கு?

மதுரம்: விபரம் இல்லாத போனு எதுக்குப் போரு?

ரெங்க: விபரத்தைச் சொல்லேன்!

மதுர: என்மேல ஏன் விழுற? விபரம் தெரிஞ்சா நீயே பின்னுல சொல்வ...உறையூரில இருந்து வர்ற போது......

ரெங்க: கோடீஸ்வரன் தென்பட்டானு?

மதுர: இல்ல! ஒரு மகான் தென்பட்டார்! சிறியவர்கள் பெரியவர்கள் எல்லாம் சாஸ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் பண்ணிணுங்க!

ரெங்க: ஸ்ரீரங்கத்துல நாமக்கார சுவாமி எல்லாத்துக்கும் சாஸ்டாங்க நமஸ்காரம் தான். இதுக்கு ஏமாந்து போயி...

மதுரம்: உலகத்தையே கவர்ந்து கொண்ட அவரிடம் ஏதோ வசீகர சக்தி இருக்கிறது. அதனுல் தான் உலக மக்கள் எல்லாம் அவர் சொல்படி ஆடுகிருர்கள் என்று மக்கள் பேசிக் கொண்டார்கள். அதனுல் அதைத் தெரிந்து வரவே தேவி அங்கு போயிருக்கிருள்.

ரங்க: தொட்டது பொன்னயே தொட்டது இது இந்தப் பொண்ணுக்கு ஆலோசனே வந்துட்டது.

மதுரம்: சுவாமிகள் அருள் கிடைத்தால் அனைத்தையும் சுலபமாகப் பெற்றுவிடலாம்.

ரங்க: எப்ப வர்ருளாம்?

மதுரம்: அந்தக் குட்டு தெரிந்து வர்றதே நல்லது.

ரங்க: என் பொண்ணே அழகு சௌந்தர்யம். கண்டா யாரும் தாசராகீருவாங்க, என் மகளுக்கு இந்தப் புத்தி வந்துட்டா மகாராஜாவக் கூடப் பல்லக்குத் தூக்க வச்சிருவேன்.

*                    *                    *

(தேவதேவி ஆசிரமம் வந்து)

தேவ: சரணம், அனுதை சுவாமி....சரணம்....... வாருமே.......வாருமே.......

ரங்க: யாரு இங்க செவிடு... செவிடு யாருமில்ல யாரு நீ?

தேவ: கண்ணே மூடிக் கொண்டால் உருவம் தெரியாது சுவாமி...

ரங்க: யாரு நீ ஸ்திரியா? புருஷரா?

தேவ: மனுஷர்கள்!

ரங்க: பின்னுல இருந்து வர்றதா பட்டாளம்?

தேவ: இல்லே சுவாமி, ஒண்டியாகத்தான் வந்தேன்.

ரங்க: ஒண்டியாக வந்திருக்கிருயா? நொண்டிச் சமாதானம்.

தேவ: சுவாமியை ரட்சிக்க வேண்டும்.

ரங்க: அவர் முகம் பாரார். போ. உன்னை விட மாட்டேன். வந்தவழி பார்த்து நட.

தேவ: பேச வேண்டும். நானே போகிறேன். என் இஷ்டத்தைக் கெடுக்காதே! சுவாமி....சுவாமி.... சுவாமி.......

ரங்க: கூச்சல். ஏன் ஒரே கூச்சல் போடுற· அவர் காதுல விழுந்திடப் போகுது!

தேவ: படணுமுன்னுதானே ... சுவாமி ... சுவாமி— சுவாமி...

ரங்க: பெண்ணுச்சேன்னு பார்த்தா உள்ள ஓடு றியே. ஒரேதா தொட்டு வெளியே தள்ளிடுவேன்!

தேவ: இந்தப் பிரம்மச்சாரி பெண்மேல அடி போட்டு தொட்டுத் தள்ருன் சுவாமி......

விப்ர: என்ன ரங்கா அபயக்குரல்?

ரங்க: சத்துரு, பெரிய சத்துரு. பேசவிடமாட் டேங்கிரு...ஆஸ்ரமத்துக் குள்ளேயே அடியோடு வந் துட்டா.

தேவ: சரணம் சுவாமி சரணம்...

விப்ர: ஒரு பயமு மில்லை, மனதை நிதானப் படுத்திக்கொள்.

ரங்க: சுவாமி அபாயம்....அபாயம். பிரம்மச்சாரிக ளுக்கே பெரிய துரோகி. ஆஸ்ரம வாசிகளுக்கே அபா யம்.......

விப்ர: இது ரங்கநாதனுக்கு உரித்தான தோட் டம். யாருமே வரலாம்!

தேவ: அதனுல்தான் பரிவுடன் வந்தேன்.

ரங்க: வேற எங்கேயும் இடம் கிடைக்கலயா இந்தத் தோட்டத்தில?

விப்ர: சாந்தமா இருங்க! இங்க வரவேண்டிய அவசியம்?

தேவ: எப்படி உரைப்பது, என்ன சொல்வது? என் பூரா கதையையும் கேட்டால் உங்கள் மனமும் உருகிவிடும்.

ரங்க: மகா ரங்கநாதர் மகாபாதகர்களையும் மன்னிக்கும்படி அப்படி சொல்றுரோ! கண்ணனுக்கு எப்பவுமே பஞ்சமில்ல!

தேவ: பார்த்தீர்களா சுவாமி, வீண் குழப்பம் செய்கிறுர். விடுங்கள் எங்காவது குளம் கிணற்றில் விழுந்து சாகிறேன்.

விப்ர: சும்மா இரு ரங்கா! பிறர் மனத்தைப் புண்படுத்துவது மகா பாவம். உன்னைப் பார்த்தாலே உன் வேதனை சரித்திரமே தெரிகிறது. சின்ன வயசிலேயே இந்த சிரமம் எப்படி வந்தது?

ரங்க: இருந்தாப்பில இருந்து தங்களுக்கு அனுதாபம் உண்டாகிருப்பிலதான்.

தேவ: இந்த ஏழைக்கு இரங்கி ரங்க நாத ஸ்வாமி அருள் கொடுத்தார். அந்தப் பேச்சு கேளும். சிறு வயது முதலே ஆடல் பாடல் மூலம் பிரக்யாதி கிடைத்தது. ஆனல் என்ன சுவாமி...

விப்ர: இன்னும் என்ன நடந்தது?

ரங்க: இன்னும் என்ன நடக்கணும். அம்மா உம் கொட்டின அங்கே உஹீம் சொன்னுப்பிலே இருந்திருக்கும்.

தேவ: அத்தனை சிரமமானல் முடிவு எதுக்கு சுவாமி.

ரங்க: பழக்க மில்லாதது ஒரு குற்றம் சுவாமி.

விப்ர: வேதனை முழுவதையும் உரைக்கட்டுமே ரங்கா!

ரங்க: கேளுங்களேன் சுவாமி!

தேவ: அம்மாவுக்கு பணமே பிரதானம். அதனல் அடிக்கடி அவ இஷ்டப்படி நடக்கச் சொன்ன!

ரங்க: அதுக்காக?

தேவ: சதா அவர் நாமகர்ணம் செய்து கொண்டிருந்த எனக்கு என் ஜீவிதத்திற்கு வழி செய்ய வில்லை. தீராத எண்ணம் தீருமா சுவாமி?

ரங்க: எங்க பேரைக் கெடுக்க இங்க வந்திருக்கயா?

தேவ: இத்தனை நாள் சிகிட்சை செய்தும் இதுதான அண்ண!

ரங்கா: ஐயோ ரங்கா ... ரங்கா .......

விப்ர: அவன் பேச்சை நம்பி வாதனைப் படாதே. என்ன நடந்தது?

தேவ: அம்மா சொல்லக் கூடாத துர்பாக்கியத்திற்காக இருட்டு அறையில தள்ளினுள். அதன்படி செய்ய சித்தமில்லாமல் ஆத்மார்க்கம் செய்துகொள்ள கரம் கூப்பி நடு ஆற்றில் இறங்கினேன்.

ரங்க: அதுக்கு பிறகு பிராணன் விடப் பிரியம் இல்லாமல் வந்துட்டபோல இருக்கு.

தேவி: ஆற்றில் விழப்போன எனக்கு ரத்ன கிரீடம் சூடப்பெற்ற எம்பெருமான் காப்பாற்றி என்ன சொன்னர்கள் .......

ரங்கா: இது பூராவும் இதுவரை சொன்ன மாதிரி தான். இதில் என்ன சந்தேகம்! ... ...

தேவி: கமல கண்ணன், கார்மேக வண்ணன் தோன்றினர். சந்தோஷத்தால் பேச முடியவில்லை. ரத்னகிரீடம் சூட்டி லட்சுமி தேவியுடன் தோன்றினர்.

விப்ர: எம் ரெங்கநாதன் நேரில் தோன்றி உன்னுடன் பேசினனு? உயர்ந்த புண்ணியாத்மா நீயம்மா. நேரில் தோன்றி என்ன சொன்னுன்?

தேவ: கருணு மூர்த்தி அமுத வாக்கினல் என்னை இங்கு அனுப்பிவிட்டார். உமக்கு பணிவடை செய்யும்படி அனுப்பினர்.

ரங்கா: அதை சொல்லு. தீர்த்த யாத்திரைக்கு முதல் தரமில்லையா!

விப்ர: நேற்று நீ வந்திருந்தாயா?

தேவ: சுவாமி...சுவாமி...தோட்டத்தில் பிரவேசம் செய்யும்போது கண்ணை மூடிக்கொண்டு சென்றீர்கள். பின் இன்று உங்கள் பாதங்களில் விழுந்து பாத சேவை செய்ய வந்தேன்.

விப்ர: புரிந்ததா ரெங்கா? என் தந்தை எதற்கு என்னை கோபித்தார் என்று என் தந்தை கட்டளையை நான் கருணை காட்டி அனுப்பி வைக்கக்கூடவில்லை. நேராகக்கூட உன்னை கவனிக்காததற்கு எனக்கு தண்டனை யிட்டார்! என் தவறு எனக்கு அர்த்தமாகி விட்டது. என் தவறை எனக்கு தெரிவித்தாயே. இனி எந்நாளும் குற்றம் செய்யேன் ரங்கா. என் தந்தையை சிரம் தாங்கி வருகிறேன். உன்னைக் கவனிக்காமல் இருந்ததால் ரட்சித்தார். இனி இத்தோட்டம் எனக்கல்ல. உனக்காகவே வைத்துக்கொள்.

ரெங்க: அவசரப் படாதீங்க சுவாமி. கொஞ்சம் யோசிங்க! ஸ்திரியோட பழக்கம். மற்றும் அவள் விலைமாது.

விப்ர: மனம் சுத்தமானல் எவர் தொடர்பும் ஒன்றுதான்! நீயும் நானும யாரப்பா ஆலோசிக்க? அவர் கட்டளைப்படி நிர்ணயம் செய்யத்தான்:

ரெங்க: என் பேச்சை நம்புங்கள். மற்றொரு தடவை ஆலோசித்துப் பாருங்கள்!

விப்ர: அவர்கள் கட்டளையை ஏற்று நடப்பதே என் பணி!

தேவ: ஆமாங்க சுவாமி. தன்யளானேன் சுவாமி தன்யளானேன்.

விப்ர: ரெங்கநாதன் அருள் புரிவார்.

* *

(தேவ தேவி தரையை கூட்டி நீர் தெளித்து கோல மிடுகிருள், விப்ரநாராயணர் வருகிருர், வணங்குகிருள், அவர் உள் சென்ற பின் ரெங்கராஜு வருகிருர்)

தேவ: ஏய்...ஏய்...பார்த்து நடக்கக் கூடாது? கண்ணு தலேக்கேறியாச்சா?

ரங்க: காலுக்கு கண் இல்ல......இல்ல மேல போயாச்சி சீக்கிரம் கொடு.......கையில இடிச்சா தர்ற.... வர வர மதியே இல்லாம போச்சி. தள்ளி குடுத்தா என்ன முழுகிப் போச்சா?

தேவ: கொண்டு வந்து கொடுத்தா பாபமில்ல தொட்டு கொடுத்தா குறைஞ்சிபோச்சா?

ரங்க: இனிமேல் உன் கையில வாங்கிறதே யில்ல!

விப்ர: ஒரு க்ஷணம்கூட இருவருக்கும் ஒற்றுமை யிருக்காதா?

ரங்க: மாலேயை கீழே வைக்கச் சொன்ன அம்மா வுக்கு ஏன் கோபம் சுவாமி?

தேவ: தவறு என்ருல் சொல்லுங்க சுவாமி. பெரு மாளுக்கு அபிஷேகிக்கும் மாலேயை தரையில் வைத் தால் அபச்சாரம் ஆகாதா?

விப்ர: அவர் அக்கினியைக் காட்டிலும் பரிசுத் தர். அவர் செயலால் தான் பாவங்களும் பரிசுத்தமாகும்.

தேவ: அதை சொல்லுங்க சுவாமி. மீண்டும் என் பேச்சை எடுக்காதே கெட்டியாய் சொல்லுங்க!

ரங்க: ஆஸ்ரமத்துக்கு அவ வந்ததில இருந்து மாலெ கெட்ட கொடுத்து வைக்கல. மாலையை சுமக்க அருகதையா சுவாமி.

விப்ர: சரியான லோகத்தில் ஆச்சாரமே வேணும். ரெங்கன் என்ற பக்தனுக்கு வித்யாசம் ஏதும் இல்லே. அவன் ஜன்ம பாவங்களுக்கு ரட்சகன்.

தேவ: தாங்கள் ஆஸ்ரமத்துக்கு வரும்போது இந்த ஏழைக்கு......

ரங்க: பூக் கொண்டு வரவா?

தேவ: கொஞ்சம் பசுவர்த்தனம் கொண்டு வரச் சொன்னு ஆச்சாரமோ என்னமோ?

விப்ர: அதுக்கென்ன இதில அனுக்கிரகம் என்ன தேவி. எல்லாம் பாதாள பரிவர்த்தனத்துக்கு தான்.

ரங்க: இனி எது வேண்டுமாயினும் என்கிட்டயே சொல்லுங்க!

தேவி: ஆகட்டும் தந்தையே.

*                    *

[ஸ்ரீரெங்கன் சன்னிதானத்தில் விப்ரநாராயணர்]

விப்ர: ரெங்கா... ஸ்ரீ ரெங்கா....என்மேல் கருணை காட்டிவிட்டாயா? என்னை மன்னித்துவிட்டாயா?

ரெங்க: மறுபடியும் அதே பேச்சா சுவாமி?

விப்ர: மனோகர விநோத சௌந்தர ஜோதியுடன் பிரகாசம் செய்கிறூர் பார்த்தியா?

ரங்க: அந்த பூமாலைக்கு புது ஸ்பரிசம் பட்டது. பெருமாளுக்கு கட கட..........

*                    *

[விப்ரநாராயணர் ஏட்டு சுவடிகளை வைத்து ஸ்லோகங்களை படித்தபடியே]

விப்ர: ரங்கா ... ரங்கா ... ரங்கா ....—

ரங்க: கூப்பிட்டீர்களா சுவாமி?

விப்ர: நித்திரை போகிருயா ரெங்கா?

ரங்க: இல்லே சுவாமி....இப்பத்தான்........

விப்ர: ஏதும் இல்லே ரெங்கா.......மதுபானத்தில் ஈடுபட்டு மகிழ்ந்து கொண்டிருக்கிறேன். ஸ்ரீ ராதாகிருஷ்ணன் யமுன நதி தீரத்திலிருந்து கோகுலத்திற்கு செல்லும்போது செடிக்கு செடி மரத்துக்கு மரம் நடத்திய லீலேகளே எவ்வளவு உன்னதமாக என்ன மதுரமாக வர்ணித்திருக்கிருர் தெரியுமா? அதை படிக்கும்போது என்ன இனிமை?

ரங்க: சாதகமாக கலேந்தால் வெண்ணேபோல் உருகி பாகாகிவிடும். இனிப்பை விழுங்கினல் கசப்பா கவா சுவாமி இருக்கும்?

விப்ர: சரியாக சொல்லிவிட்டாய். பாவங்களே உணர்ந்து நந்தகோபாலன் பாடல்களேப் பார்த்தால் அப்படி அப்படியே அமைந்திருக்கிறது பார்த்தாயா? அந்த நந்தகுமாரன் வேதங்களிலே என்ன ரம்மியம்?

ரங்க: காண்பது ஒன்று, கருத்தில் ஒன்று, பிள்ளேகள் பேச்சிலும் பெரியவர்களுக்கும் ஒரே அர்த்தம் தான். ஆழ்ந்து யோசித்தால் அதில் மனம் ஒரேயடியாக லயித்து விடுகிறது சுவாமி.

விப்ர: ஆமாம்...ஆமாம். இந்த இருளேத் தெளிவு செய்து விட்டு வெளிச்சத்திற்குப்போகணும். கொஞ்சம் சிரமம் இருந்தாலும் அதை சகித்துக் கொண்டு வந்தால் வழி கிடைத்து விடும்.

ரங்க: என்ன கிடைக்குமோ? என்ன நடக்குமோ? எல்லாம் அரங்கனின் செயல் சுவாமி.......

விப்ர: ரெங்கா......ரெங்கா......

0 0 0



(தேவ தேவி தனிமையில் அமர்ந்து)

தேவ: (பாடல் உருவில்)இறைவா கண்ணா நீ வா நாயகனே.ஜெய கீதா ராதா.......

[விப்பர நாராயணர் தூக்கம் தெளிந்து எழுந்து வந்து]

விப்ர: தேவி.......

தேவி: சுவாமி........

விப்ர: பாட்டு அமிர்த மயமாக இருந்தது தேவி...

தேவி: எந்தப் பாட்டு?

விப்ர: அந்தப்பாட்டு......உன்பாட்டு....... அந்தப் பாட்டு ஆண்டவன் தரிசனத்துக்காக அல்லும் பகலும் ஏங்கிக் கிடக்கும் என் இதயத்துக்கு அமிருதமாகி விட்டது. எங்கே மீண்டும் பாடு!

0 0 0

[விப்பரநாராயணர் தேவ தேவி, ரங்கராஜு வுடன்]

விப்ர: ஆ ஹா ..........என்ன அதிசய கம்பீரம்! மோகன கிருஷ்ணன் கெட்ட நினைவோடு கலந்து கொண்டப் போதும் திரைவிலகினாற் போல் நினைவுறுத்தினர். கோபால கிருஷ்ணனை நினைத்தாலே சர்வ பந்தமும் க்ஷணத்தில் விட்டு உலகெங்கும் குணவிசேஷமாய் நடந்திடும்.

தேவ: மன்னிக்கணும் சுவாமி. ஒரு சின்ன சந்தேகம்!

ரங்க: எப்பவும் சந்தேகம்தான்!

விப்ர: என்ன சந்தேகம் தேவி?

தேவி: கோபிகள் எல்லோரும் கெட்டப் புத்தியோட பழகினர்களாமே.......

ரங்க: அதைக் கேளுங்க!

தேவ: அதைக் கேளுங்க சுவாமி......கேளுங்கள்! நான் இங்க வசிக்கிறதும் படிக்கிறதும் அவருக்கு பிடிக் கவே யில்ல நான் சந்தேகத்தைக் கேட்டால்....

ரங்க: பத்து பேரை கட்டிப்பிடிச்சு பாதாளத் திலே தள்ளிவிடணுமாம். அதைப்பற்றி இங்க அனுப வம் இல்ல. இங்க இருந்து வெளியே போன சந்தோ ஷமே! நஷ்டம் இல்ல.

தேவ: கேட்டீரா சுவாமி. நான் வெளியே போனல் சந்தோஷமாம், அவருக்கு.நான் வருகிறேன்! ரெங்க ராஜா சந்தோஷமாயிரு!

ரங்க: அப்படியே தேவி......

விப்ர: நில்லு தேவி

தேவி: எனக்கு அந்த மாதிரி விஷயம் கேட்டா தவறு சுவாமி!

விப்ர: என்ன ரெங்கா விதண்டா வாதம்?

ரங்க: விதண்டா வாதம் இல்லாத போன விளக் கம் சொல்றீங்களா? கேட்க்கக் கூடாது.

விப்ர: தெரிந்து கேட்டாலும் தெரியாமல் கேட் டாலும் விளக்கம் சொல்வது நமது கடமை தான?

ரங்க: அர்த்தம் இல்லாம கேட்பாங்களா?

தேவ: அத்தனைப் பெண்களோடு ஆட்டம் ஆடி னர் கோபால கிருஷ்ணன். ஒரு ஸ்திரி கூட கணவன் இன்றித் தவிக்கும் போது அப்படி ஆட்டம ஆடினல் தவறுகாதா?

விப்ர: அவர் என்றுமே கெட்டவராகாது. கோபிகா ஸ்திரிகள் அஞ்ஞானத்தை விரட்டினர் என்று அர்த்தமாகாது. ஆண்களின் அஞ்ஞானத்தை விரட்டி னர் என்று அர்த்தம்.மோகனகானம் இசைத்து சிலரை

படுக்கையிலும் சிலரை வழிபாதையிலும் அழைத்து பின்!

தேவி: தாங்களே சொல்லுங்கள் சுவாமி!

ரங்க: தம்பி தங்கை எதிரே வந்திருக்கும் நின்று போயிருக்கும்....

விப்ர: அவர்கள் அஞ்ஞானத்தை அவ்விடத்திலேயே அகற்றினுர் என்று சொல்லலாம். பிரபஞ்சத்தை கவனிக்காமல் பரம் பொருள் விவாதத்தை கவனித்தார் என்ருல் கெட்டவர்களுக்கு தியாக புத்தியை எடுத்துக் காண்பிக்கவேதவிர கெட்டபுத்தியை எடுத்துக் காட்டக்கூடாது. இதுவே அதன் விளக்கம். சந்தேகம் தீர்ந்ததா தேவி?

தேவி: தீர்ந்தது சுவாமி!

விப்ர: இன்றைக்கு சர்ச்சை இன்ருேடு நிறுத்துவோம்.(போகிருர்)

ரங்க: உரைப்பவர்களும் அர்த்தமாகாமல் கேட்பவர்களும் அர்த்தமாகாமல் இருக்கிறது:இன்னும்... .......
எங்கே சுலோகம் படித்துக் காட்டுப் பார்ப்போம்!

தேவி: அந்த சுலோகம் இங்கே இல்லே அண்ணு!

ரங்க: மறந்ததை ஞாபகத்துக்கு கொண்டு வருகிருயா தாயே?

தேவ: எனக்குத் தெரிந்ததை மறந்து போக மார்க்கம் உண்டாதந்தையே.

0 0 0

(தேவ தேவி தன்னந் தனியே சோகமாக பாடுகிருள்)

(புயலும் இடியும் மின்னலுமாக மழை பொழிகிறது. அப்போது ஆஸ்ரமத்திற்குள்)

விப்ர: ரெங்கா....ரெங்கா....

ரெங்: என்ன சுவாமி?

விப்ர: ஒரேயடியாக இருள் மூடி கடும் மழை பெய்கிறது ரெங்கா!

ரெங்: பஞ்ச பூதங்களும் அடங்கிவிடும்.

விப்ர: அவள் எங்கு ஒதுங்கி கஷ்டப் படுகிருளோ? அவள் கதி என்ன ஆயிற்ருே. அவள் எங்கு அல்லாடுகிருளோ!

(தேவ தேவியை தேடி விப்ர நாராயணர் வெளியேறுகிருர். அவரை பின் தொடர்ந்து ரங்கராஜம் வெளியேறுகிருன்)

விப்ர: தேவி....

ரெங்க: சுவாமி போகாதீர்கள். சுவாமி.... சுவாமி....

விப்ர: தேவி....

ரெங்க: சுவாமி....

விப்ர: தேவி.... தேவி.... தேவி.... தேவி.... தேவி... தேவி... தேவி.......

ரெங்க: சுவாமி...

(மழையில் நனைந்தவாறே தன் நினைவின்றிக்கிடக்கிருள் தேவ தேவி. விப்ர நாராயணர் தன் மேல் அங்க வஸ்திரத்தை மேலே போர்த்தி அவளைத் தூக்குகிருர்)

ரெங்க: சுவாமி......

விப்ர: பிடி....பிடி...தூக்கு...தொட்டால் பரவாயில்லை...பிடி....அந்தக் கையைப் பிடி....
(தேவ தேவியை இருவரும் அணைத்தபடியே ஆஸ்ரமத்திற்கு அழைத்துவந்து படுக்கையில் படுக்க வைக்கும் போது)

ரெங்க: சுவாமி...சுவாமி....உங்க படுக்கை சுவாமி...சுவாமி.......

விப்ர: ரொம்ப ஜில்லின்னு இருக்கு. கொஞ்சம் சுட சுட பால் இருந்தால் பரவாயில்லே....

ரெங்க: கொஞ்சம் துளசி பொடி இல்ல ஓமப் பொடி ரசம் ஒரு பொட்டு மூக்கிலே தேச்சா மயக்கம் தெளிஞ்சிரும் சாமி...

(தேவ தேவியின் மயக்கம் தெளிகிறது)
பார்த்தீங்களா சுவாமி மருந்துப்பேறச் சொன்னவுடனே யே மயக்கம் தெளிஞ்சிருச்சி!

விப்ர: தேவி. எப்படி இருக்கு?

தேவ: ஜிலு ஜிலுன்னு இருக்கு!

விப்ர: இந்தா இந்த வேஷ்டியை கட்டிக் கொண்டு தலையை துடைத்து ஆறவைத்துக் கொள் நடக்க முடியுமா தேவி? ஜாக்கிரதை.

ரெங்க: சுவாமி....சுவாமி....சுவாமி...... இதென்ன சுவாமி பரிவு?

விப்ர: என்ன செய்தேன் ரெங்கா?

ரெங்க: அளவுக்கு மீறின அபாயம்.

விப்ர: இதாலே என்ன கெட்டு விட்டது ரெங்கா? ஆபத்துக் காலத்துல அண்டினவங்களுக்கு அனுக்ரகம் செய்யாவிட்டால் என்ன ஆவது? குளிருக்கும் மழைக் கும் கஷ்டப்படுவோரை காப்பாற்றுவது பகவத் கைங் கர்யம். பாபமாகாது....

ரெங்க: அன்புக்கும் ஆதரவுக்கும் ஒரு எல்லை யிருக்கணும். இல்ல ஆபத்து. அன்னைக்கு தோட்டத் திலே இருக்கச் சொன்னீங்க! இன்னைக்கு நம்ம குடி சைக்கே வந்தாச்சி!

விப்ர: மழைக்கும் குளிருக்கும் உதவினால் அந்த பாவம் நம்மை சுற்றிக் கொள்ளாது....(தேவ தேவி வருகை) தேவி. இந்நாள் மட்டும் உன் யோக க்ஷேமங்

களை விசாரிக்கவேயில்லை. இனி இக்குடிசையிலேயே என் கண் முன்னயே இரு!

ரங்க: அதென்ன சுவாமி?

விப்ர: நீ வசிக்கல?

ரங்க: நானும் அவளும் ஒண்ணு சுவாமி. என்னை அவளோடு சேர்க்கிறீங்களே!

விப்ர: எனக்கு எல்லோரும் சமம்...

ரங்க: இந்த சின்ன குடிசையிலே அவளோட எப்படி இருக்கிறது?

விப்ர: ஒருவாறு சரி செய்து கொள்! தேவி.... அங்கே படுத்துக் கொள்.

(தேவதேவி அங்கும் இங்கும் செல்கிருள்!)

ரங்க: அங்க போகாதே...அங்க போகாதே.... நில்லுநில்லு. அதை தொடக்கூடாது....மடி வேஷ்டி இருக்கு. மடி வேஷ்டி இருக்கு. ஆ....என் படுக்கை.... இருக்கிற பேய ஒண்ட வந்த பேயி விரட்டுச்சாம்.... கொஞ்சம் தூர படுத்துக்க...

* * *

(ரெங்க நாயகி தன் இல்லத்தில் இங்குமங்கும் உலவு கிருள்)

* * *

(விப்ர நாராயணருக்கு ஆடை முதலியவைகளை தேவ தேவி எடுத்துக் கொடுக்கிருள். பின் பூஜைக்கு வேண் டிய ஆயத்தங்களை செய்யும் போது)

ரங்க: சுவாமி....சுவாமி...சுவாமி.........

தேவ: என்ன சுவாமிக்கு?

ரங்க: சுவாமி எங்கே?

தேவ: உள்ள யிருக்கார்!

ரங்க: கோயிலுக்குப் போகணும்...

தேவ: போயிட்டுவா., இன்னும் அனுஸ்டானம் ஆகல. சுவாமிக்கு உடம்பு சரியில்ல.

ரங்க: உனக்கு என்னமா தெரியும்?

தேவி: போயிட்டு வா!

ரங்க: உன்னோட எனக்கென்ன பேச்சு?

(விப்ர நாராயணர் வருகை)

விப்ர: என்ன சொல்ற தேவி?

தேவ: சுவாமிகளை வரச் சொல்லி அழைத்தார். வரமாட்டார் என்றேன்.

விப்ர: நிஜம்தான் ரெங்கா! என் உடல் சரியில்லை!

ரெங்க: சுவாமிகள் ஏன் வரவில்லை என்று கேட்டால்?

தேவ: என்னிடம் நூறு பிரச்சனைகளுக்கு கேட்கிற ஒரு பிரச்சனைக்கு பதில் சொல்லக் கூடாது.

ரங்க: ஆகட்டும், தவரும அப்படியே சொல்றேன். உங்க காரியம் ஒழுங்கா நடக்கட்டும்.

* * *

(ஸ்ரீ ரங்க நாத சந்நிதானத்தில்)

குரு: விப்ர நாராயண சுவாமிகள் ஏனோ இன்னும் வரவில்லையே சுவாமி!

மற்ற: அதான் நானும் யோசிக்கிறேன். அதோ ரெங்க ராஜு. அவர் சிஷ்யர்.

(பூஜை நடக்கிறது)

குரு: இதுவரை பூமாலை வரவில்லையெனவும் ஏதேதோ எண்ணினோம்.

ரங்க: இன்று அவருக்கு ஆரோக்யம் சரியில்லை!

ஒருவர்: அவர் முன் மாதிரி இப்ப சரியாக இல்லை. கொஞ்ச நாளாக ஏதோ ஒரு மாதிரியாக இருக்கிறார்.

மற்றவர்: அவரும் மனுஷர் தானே! அவர் வேதனை அவருக்கு!

ஒரு: பெருமாளுக்கு சமர்ப்பிப்பது ஹிருதயம் தானே தேகமில்லையே.

(ஓர் புறம்)

ஒருவர்: ரெங்கராஜீ! சின்ன பேச்சு.

ரங்க: என்ன சிங்காரம்?

ஒருவர்: உங்க குருவுக்கு என்ன உடம்போ?

ரங்க: மழையினுல் உடம்பு சரியில்லை!

ஒருவர்: ஊருல விதவிதமா பேசிக்கிறுங்களே?

ரங்க: என்ன சிங்காரம்?

ஒருவர்: உங்க ஆஸ்ரமத்திலே விதவிதமா ஆட்டமும் பாட்டும் பேச்சும் நடக்குதாமே! யாரோ ஒருத்திய வச்சி...

ரங்க: அவ என்ன உனக்கு உறவா?

ஒருவன்: யாருக்கு உறவுன்னு உனக்குல்ல தெரியணும்?

ரங்க: தெரிஞ்சத சொல்றேன். திக்கில்லாத பெண்ணுச்சேன்னு சொல்லி.......

ஒருவன்: என்னதான் பச்சாதாபம் இருந்தாலும் ஒரு வேசியைத்தானு பூஜைக்கு பூக் கொண்டாரச் சொல்றது?

ரங்க: வேசின்னு விரட்டிப் புடனுமுங்கிறயா? பொழுதெல்லாம் முக்காடு போட்டுக் கிட்டு தாசி வீட

சுத்துறதுற குறைச்சலில்லே. பிச்சிப்புடுவேன் பிச்சி. பல் போயிடும் ஜாக்ரதை!

*　　　　*　　　　*

(விப்ரநாராயணர் தேவ தேவியிடம்)

விப்ர: ஆஹா...மனோகர யமுனா நதி தீரத்திலே கோபிகா பெண்கள் மன்மத மதனலீகமாய் ரமணிய ராஜரீக விநோதம் தேவி...அதோ...தேவி.......

(தேவதேவியின் காலைக் கட்டிப் பிடித்துக் கொண்டு தன் நினைவிழந்து விப்ரநாராயணர்)

விப்ர: நர்த்தன நவநீத ஜோரா...பக்த வத்சலா, எனக்கெனத் தொண்டு செய்ய இன்றே கருணை காட்டினாய்!இன்றே உன்னை நினைத்து ஏங்கினேன் உன் சௌந்தர்ய ரமணியம் காண்பித்திடு!

தேவ: சுவாமி...மன்னித்து விடுங்கள்...விடுங்கள். நந்த கோபாலனல்ல நான் தேவ தேவி......உங்கள் சேவகி.

விப்ர: தேவி! அப்பனின் மயக்கத்திலே என் நினைவையே மறந்து விட்டேன்!

தேவி: அதுதான் சுவாமி! இன்று இத்துடன் நிறுத்திக் கொள்வோம், மறுபடி நாளை வைத்துக் கொள்வோம்.

*　　　　*　　　　*

(விப்ரநாராயணரிடம் ரெங்கன் ஓடிவருகிறான்)

ரெங்க, சுவாமி...சுவாமி...சுவாமி......

விப்ர: என்னப்பா ரெங்கா?

ரங்க: இன்னைக்கி ரெண்டுல ஒண்ணு தெரியணும்!

விப்ர: ரெண்டுல ஒண்ணா?

ரங்க: மகானுபவர் தோட்டத்திலே கண்ணைக் காதை மூடிகிட்டு இருந்திருறீங்க! வெளியே தலைகாட்ட முடியல!

விப்ர: இந்தப் பேச்செல்லாம் எதுக்கு ரெங்கா?

ரங்க: வேற யாரையாவது சொன்னு நான் எதுக்கு சுவாமி வர்றேன்!

விப்ர: யாரைக் குறித்து...

ரங்க: நம்ம ஆஸ்ரமம் சரசாங்கமடமா இருக்குதாம். நீங்க வேணுமுன்னு தாசியை சேர்த்துக் கிட்டீங்களாம்!

விப்ர: அபச்சாரம்...அபச்சாரம்......

ரங்க: நம்மளே வேணுமுன்னு வேசியை வைத்திருப்பதாக நிர்ணயிச்சிக் கிட்டங்காகளாம் சுவாமி......

விப்ர: பரம பக்தை ரெங்கா!

ரங்க: அது உங்க அபிப்பிராயம். பனை மரத்தடியில் பாலைக் குடித்தா பார்க்கிறவங்க பாலுன்னு சொல்வாங்க?

விப்ர: அவ்வளவேதானு ரெங்கா?

ரெங்க: உலக சிருஷ்டியிலே அவள் கீழ்த்தர விலைமாதே! அவள் சகவாசத்தால் சுவாமிகள் கெட்டுவிட்டார்கள் என்ற பழி உங்களுக்கு வரலாமா?

விப்ர: ரெங்கா...ரெங்கா...அதற்கு நான் என்ன செய்யணும் ரெங்கா?

ரெங்க: ஆஸ்ரமத்திலிருந்து அவளை வெளியேற்றுங்கள்!

விப்ர: அநியாயம் ரெங்கா...இங்கே சேர்ந்தால் ஒரு ஆபத்தும் நேராது என்று நம்பினளே ரெங்கா! என்னல் ஆகாது ரெங்கா.........

ரங்க: நம்மால ஆகாதுன்னு என் கிட்ட விட்டுடுங்க, அந்தப் பாவத்தை நான் ஏற்றுக்கிடுறேன்!

விப்ர: சரி...

ரங்க: ஆம் அதுதான் சரி. நான் வருகிறேன்...

(தேவ தேவியிடம்)

ரங்க: இந்தா இந்தா ...முடிச்ச கட்டிக்க!

தேவ: ஏன் ரெங்கராஜா?

ரங்க: பிரயாணத்துக்கு!

தேவ: எதுக்கு? எங்கே? எப்போ? ஏன்?

ரங்க: அம்மா அம்மா ஊருக்கு இங்க இருந்து போயிடு......

தேவ: ஒன்றும் தெரியாதே! எதுக்கு எங்க நான் போகணும்?

ரங்க: எனக்குத் தெரியணும் சுவாமிக்குத் தெரியணும். உனக்கு எதுக்குத் தெரியணும்?

தேவ: முழுப்பொய். என்னை ஏமாற்றி வெளியேற்றப் பார்க்கிற......

ரங்க: எது பொய்...போ....போ......

தேவ: நீ யார் சொல்றதுக்கு? சுவாமிகள் சொன்ன வெளியே போகிறேன்.

ரங்க: எதுக்கு இங்கிருந்து போ......

தேவ: சுவாமி.......

ரங்க: அவர் முகம் பாரார்.

தேவ: சுவாமி...

ரங்க: இந்தா என் கிட்ட பேசு...

தேவ: சுவாமி...

ரங்க: போகாலே...

தேவ: சுவாமி...

ரங்க: போகமுடியாது......

தேவ: சுவாமி.......

ரங்க: என்கிட்ட பாரு!

தேவ: சுவாமி...போக முடியாது— என்னைத் திருவடிகளில் சேர்த்துக் கொள்ளுங்கள். ஏன் பேச மாட்டேன் என்கிறீர்கள். உங்களுக்குச் செய்த சேவை களில் தவறினேனு? சொன்னபடி நடக்காமல் போனேனு? உங்கள் வார்த்தையைக் கேட்காமல் போனேனு? இந்தத் துர்பாக்கியவதியை கடைத்தேறச் செய்யுங்கள். ஏன் கோபம் சுவாமி. நான் ஏதாவது குற் றம் செய்தால் மன்னிக்கக் கூடாதா?

விப்ர: ரெங்கா...

ரங்: அனுப்பி விடுங்கள்.அவர்சொன்ன வார்த்தை மாற மட்டார்...

தேவ: என்னை மன்னித்து விடுங்கள். என்னைக் கைவிட்டு விடாதீர்கள்.என்னை வெளியே போகச் சொல் லாதீர்கள்.

விப்ர: எல்லாம் அரங்கனின் செயல்.......

(ரங்கா ராஜு வெளியேறுகிருன்)

ரங்க: சுவாமி.........ஆஸ்ரமத்தோட தொடர்பு விட்டது.

விப்ர: இதென்ன ரெங்கா?

ரெங்க: எதுக்கா? கண்ணுல கண்டும் கூடக் கேட் கிறீங்களே!

விப்ர: போகாதே ரெங்கா!என் பேச்சைக்கேள்.

ரங்க: இந்த ஆஸ்ரமத்தில் நாஞவது இருக்கணும் இல்ல அவளாவது இருக்கணும். என் தவறுகளை மன் னித்து விடுங்கள் சுவாமி......

விப்ர: ரெங்கா...(போகிருன்)

0 0 0

[விப்ர நாராயணர் நீர் இறைக்கிறுர். தேவதேவி தன் நினைவை அவர் இதயத்தில்நிறைத்துக்கொள்வவற் கெனப் பாடுகிருள்]

(பாடலைக் கேட்டு ரசித்து வந்த விப்ரநாராயணர் கீழே விழுகிறார். தேவதேவி கரம்பிடித்துத் தூக்கி விடுகிறாள்)

தேவ: சுவாமி……

0 0 0

(ரெங்கநாயகி தன் இல்லத்தில்)

ரெங்கனா: மதுரம்…மதுரம்….ஏ சரசா….சரசா…

மதுரம்: ஏம்மா?

ரெங்க: அம்மாவுமில்ல ஆட்டுக் குட்டியுமில்ல……. நான் வெளியே போறேன்!

மதுரம்: எங்கம்மா

ரெங்க: இந்த சம்சாரம் நான் கவனிக்கல. காடு வா வாங்குது. எனக்கு எதுக்கு இந்த தொல்லே.நான் போறேன்.

மதுரம்: எதுக்கு……

ரெங்க: சின்னவா சமாச்சாரம் எதுவும்தெரியல…

மதுரம்: அதுக்கு நீ எங்கபோற?

ரெங்க: ஸ்ரீ ரங்கத்துக்கு. அவ அங்க சம்சாரம் செய்யிறாளா, இல்ல சன்னியாசம் செய்யிறாளான்னு பார்த்துட்டு வரப் போகிறேன்.

மதுரம்: கொஞ்சம் நிதானமா ஆலோசனை பண்ணிப் பாரம்மா!

ரெங்க: அந்த சன்னியாசியை வலையில் போட்டுக்க இவ்வளவு நாளா?

மதுர: செடியில இருக்கிற பழமா நினைச்ச நேரம் பிடுங்கிக் கொள்ள? சுவாமிகள் அனுக்கிரகம் பண்ணணும். நம்ம வழிக்கு கொண்டுவரணும். என் பேச்சைக் கேளு, நாலுநாள் பாரு! வரல தங்கம் போல பொண்ணை நானே ஸ்ரீரங்கம் போயி அழைச்சிட்டு வர்றேன்.

0 0 0

[தேவதேவி விப்ர நாராயணரிடம்]

தேவ: சுவாமி நித்திரை நேரமாச்சு, சயனிக்க வாருங்கள்.

விப்ர: நீயும் போஜனம் செய்தாயா தேவி?

தேவ: அதென்ன சுவாமி! த ம் மே ா டு த ானே போஜனம் செய்தேன்!

(விப்ர நாராயணர் கால்களை தேவதேவி அமுக்கி விடுகிருள். உணர்ச்சி வசப்பட்ட விப்ர நாராயணர் எழுந்திருக்கிருர்)

தேவ: ஏன் சுவாமி... இப்போது ஏதோ விதமாக இருக்கிறீர்கள் ரெங்க ராஜனை நினைத்து விட்டீர்களா?

விப்ர: இல்லை...

தேவ: இந்த தாசி, ஏதாவது அபச்சாரம் செய்தாளா?

விப்ர: இல்லை தேவி.

தேவ: ஏதோ மனதில் உள்ளதை மறைக்கப்பார்க்கிறீர்கள்!

விப்ர: என் உடம்பெல்லாம் ஒரே நெருப்பாய் இருக்கு தேவி...

தேவ: இந்த பேச்சு சொல்ல ஏன் இந்த யோசனை? சந்தனம் பூசிக் கொண்டால் சாந்தமாகும்.

(சந்தனம் பூசி விடுகிருள்)

கொஞ்சம் குளிர்ச்சிப் பட்டுள்ளதா சுவாமி

விப்: உன்னுடைய கைகள் ஸ்பரிசம் பட்டவுடன் இத்தனை ஆதரவாக எவ்வளவு குளிர்ந்து விட்டது!

தேவ: அதற்கு மாத்திரை மருந்து சாப்பிடுங்கள்.

விப்ர: உன் ஸ்பரிசம் எவ்வளவுசந்தோஷத்தைக் கொடுக்கிறது. உன் கைகளில் எவ்வளவு அமர சக்தி இருக்கிறது.

தேவ: சுவாமி... இதென்ன சுவாமி... ஏழையைப் பரிசோதித்துப் பார்க்கிறீர்களா?

விப்ர: உன் சௌந்தரியத்திற்கு என் ஜீவி யத்தைக் காணிக்கையாக்குகிறேன் தேவி.

தேவ: மன்னிக்கணும் சுவாமி. தேவனின் பரி சுத்தத்திற்காகவே என் உடலை அர்ப்பணித்தேன். மறந்துபோன சரீரசுகத்துக்கு மீண்டும் போதை ஏற்ரு தீர்கள்.

விப்ர: தடுக்காதே தேவி. என் வாழ்க்கைப் பாதையிலே என் தெய்வம் நீயே. என்பேச்சை நம்பு. என்னை அணைத்துக் கொள்.

தேவ: வேண்டாம் சுவாமி. மகா தவறு செய்து விடாதீர்கள்.என்னை,இந்த அபலையயை ஸ்பரி சிக்காதீர்கள் சுவாமி.

விப்ர: அப்படிச் சொல்லக்கூடாது. உன் ஸ்பரி சத்தைவிட ஆனந்தம் வேறில்லை.

தேவ: சுவாமி. என் பேச்சைக் கேளுங்கள்.நீங்கள் பிராமணர். பரிசுத்தமானவர். நான் தபசி. என்னைத் தொடாதீர்கள்.

விப்ர: தேவி. எது வேண்டுமானுலும் பேசு! தாசி தாசனுக்கு அடிமை. தேவி நீ தடுக்கக் கூடாது.

தேவ: சுவாமி ... அபச்சாரம்! அபச்சாரம்.

விப்ர: உபச்சாரம். என்னை அணைத்துக் கொள். தேவ தேவி....தேவி ... தேவி.

தேவ: சுவாமி....சுவாமி........

[ஒருவரை ஒருவர் தழுவிக் கொள்ளுகின்றனர். மாவும் மலர்க் கொடியுமாக]

* *

[சோலையினுள் தனியே ஓடி வந்த தேவ தேவி தன் மனச்சாட்சியுடன் போராடுகிருள்; மனச்சாட்சி வெற்றி கொண்டு விப்ரநாராயணருக்கு நீ அடிமை அவர் உன் பதி; இகத்திலும் பரத்திலும் அவரே என் பதை உணர்த்திச் செல்கிறது. தன்னைத்தானே உணர்ந்து கண்ணீர் வடிக்கிருள். அப்போது விப்ரநாரா யணர் வந்து]

விப்ர: தேவி....தேவி... என்ன தேவி இது? துக்கக் கண்ணீர்?

தேவி: இது துக்கக் கண்ணீர் இல்லே சுவாமி. ஆனந்த வாழ்விலே என்னை விழச் செய்தீர்கள். அமரத்வம் அளித்தீர்கள் எனக்கு. என்னை ஆசீர்வதியுங்கள்.

விப்ர: எழுந்திரு! உன்னல் என் வாழ்வு புனிதமாகிவிட்டது. நீ புனிதமானவளே! என் வாழ்வின் மலர்ச்சியைக் காட்டி விட்டாய்.

விப்ர: தேவ தேவி.

(தேவ தேவியைத் தேடி மதுரவாணி வருகை தந்து)

மதுர: தேவி......

தேவ: அக்கா! எப்ப வந்த?

மதுர: ஏம்மா தேவி! என்னைப் பூர்த்தியா மறந்துட்டயா?

தேவ: ஆமா அக்கா! என் சந்தேகமே என் ஜீவிதத்தை கடைத்தேற்றியது.

மதுர: என்ன பேச்சு? எனக்கு அர்த்தமாகலயே,

தேவி: சுவாமி என்னை அனுகிரகித்தார் அக்கா! கபட நோக்கத்தோடு நான் அவர் அனுக்கிரகத்துக்குப் பாத்யமாகவில்லே. சகலமும் அவருக்குச் சமர்ப்பித்து விட்டேன்.

மதுர: என்ன அபச்சாரம். அந்த மகா பிரபுவின் பிரேமைக்குப் பலியாகிவிட்டாயா? ஊருக்குப் புறப்படு.

தேவ: நடக்காதக்கா.

மதுர: அபராதம் செய்தவர்கள் பேசும் பேச்சே இதுதான். உன் பாவத்துக்கு மன்னிப்பே கிடையாது!

தேவ: நன்றே ஆலோசித்தே இந்த முடிவுக்கு வந்தேன். அவர் என்னை நம்பி ரங்க ராஜனையும் விட்டுப் பிரிந்திருக்கிறர். என் வாழ் நாள் முழுவதும் என் சுவாமியின் திருவடியிலேதான் இருப்பேன்.

மதுர: நீ இங்கே வந்ததால்தான் அருளின் பாதை கிடைத்திருக்கிறது. அம்மாவையாவது ஒரு தடவை வந்து பார்த்துட்டுப் போ.

தேவ: வேண்டாம். இனி அந்த வீட்டு வழிக்கே வர முடியாது. மறந்து போ!

மதுர: உன்னால் மறக்க முடிந்தாலும் அம்மாவால் உன்னை மறக்க முடியுமா? நீ இங்க வந்தது அவர் ரகசிய சக்தியை தெரிந்து கொள்ள என்று சொல்லியிருக்கிறேன். அவள் தினமும் இங்கு வர நினைக்கிறாள்.

தேவ: ஏன் அப்படிச் செய்தாய் அக்கா?

மதுர: என்ன செய்வது? அப்போது அப்படித்தான் சொல்ல முடிந்தது. என் வார்த்தையை நிறைவேற்று எப்படியாவது. வா!

தேவ: சரி....சுவாமியின் உத்தரவுக் கேட்டு நாளைக் காலை வர்றேன். போ!

(தேவ தேவியிடம் விப்ரநாராயணர்)

விப்ர: தேவி! என்ன இதெல்லாம்?

தேவ: எங்கம்மா படுத்த படுக்கையாய் இருக்கிறாளாம். என்னை பார்க்கத் துடிக்கிறாளாம். ஒரு தடவை வீடுவரை போய் வர!

விப்ர: அவசியம் போ! தாயின் அபிலாசையைத் தீர்க்க வேண்டியது உன் கடமை.

தேவ: ஒரு தடவை கண்டு போகும்படி பலமுறை சொன்னாள். கண் விழியிலே பிராணனை விடுகிறாளாம். உங்களிடம் சொல்லி வருத்திக் கொள்ளப் பலமுறை சொன்னாள்.

விப்ர: யார்?

தேவ: என் அக்காள். மாலைப் பொழுதுக்குள் இங்கு இருக்கிறேன் சுவாமி.

விப்ர: அதுவரைக்கும் எப்படி இங்கு தனியே இருப்பேன்?

தேவ: எனக்கும் அதுதானே சுவாமி! பிராணன் தங்கள் சந்நிதானத்திலேயே நிற்கும். வருகிறேன் என்று வராமல் போவேனா?

விப்ர: சந்திர பிம்பத்தை காணுமுன் இந்த சுந்தர தரிசனம் கிடைக்குமா?

தேவ: கிடைக்கும் சுவாமி.

*  *

[தேவ தேவி சென்றபின் தனிமை அவர் உள்ளத்தைத் தணலாக்குகிறது. அவரும் பின் தொடர்கிறார்]

விப்ர: தேவி ...தேவி ...

தேவ: இதென்ன? சுவாமி எங்கே பிரயாணம்?

விப்ர: உன்னை யடைவதற்கே! ஒண்டியாக ஆஸ்ரமத்தில் இருக்க முடியாமல் வந்தேன்!

தேவ: வேண்டாம். என் சொல்லைக் கேளுங்க! அது பயங்கர நரகம்.

விப்ர: நீ உள்ள இடம் எங்கே நரகமோ அந்த இடமே ஸ்வர்க்கம்

தேவ: நான் உடனே வந்து விடுவேனே!

விப்ர: என்னை மறுக்காதே தேவி....

தேவ: அங்கே வரவேண்டாம் சுவாமி·

விப்ர: உன்னைப் பிரிந்து ஒரு கணம்கூட இருக்க முடியாது தேவி. வா போகலாம்.

*  *

(இருவரும் வீட்டினுள் நுழைகின்றனர்)

தேவ: சரசா!

சரசா: அக்காளா? அம்மா.......அம்மா.......அக்கா வந்தாச்சி அம்மா!

தேவ: அம்மா .......

ரங்க: தேவி......

தேவ: அம்மா ...

ரங்க: தேவி....என் கண்ணே தேவி...வந்துட்டயா கண்ணே! இத்தனை நாளைக்குப் பின் அம்மாவைப் பார்க்க மீண்டும் வந்தாயா அம்மா....என்னமா மாறிப் போயிட்ட அம்மா இவர் யாரம்மா?

தேவ: சுவாமிகளம்மா...... இவர்களுக்காகத்தான் நான் போனது!

ரங்க: இதுவரைக்கும் சொல்லலியே! நமஸ்காரம்! சுவாமியின் அனுக்ரகத்தால் தன்யமானேம். தேவி......

மதுரம்...மதுரம்... அப்படி கண்ண வச்சி பார்க்கிறயே. தங்கச்சி வந்திருக்கா.......மதுரவாணி பெரியவ....... ஒண்ணும் தெரியாது. ஏதும் சொல்லியே செய்யணும். நமஸ்காரம் சுவாமி....

மதுர: நமஸ்காரம் பண்ணம்மா...

ரங்க: எல்லாம் பொம்மையா நிக்கிறீங்களே? ஜவ்வாது போட்டு தண்ணீரிலே ஸ்நானம் செய்யச் சொல்லம்மா.

தேவ: சுவாமிகள் கைங்கர்யம் நான் செய்யிறேம்மா.........(பின்)

ரங்க: தேவ தேவி.......

தேவ: ஏம்மா?

ரங்க: தேவி! இத்தனைக்கும் போன வேலை ஜெயம் தானே?

தேவ: ஜெயம் தாம்மா! என் ஜென்மம் கடைத்தேறிவிட்டது.

ரங்க: அதோட நம்ம குறை கூட நிறைவேறின மாதிரிதான். சுவாமிகளுக்கு இந்த சக்திதானு? தனம் கூட உண்டா?

தேவ: தனம். தேசத்திலுள்ள தனம் மெல்லாம் சேர்த்தாலும் அவர் கால் தூசிக்கு ஈடாகாதம்மா!

மதுரம்: பேச்சிக்கு இதுதானு நேரம் அப்புறம் பேசக்கூடாதா?

* * *

(விப்ர நாராயணரிடம் ரங்கனுயகி தனியாக)

ரங்க: தாம்பூலம் கட்டிக் கொடுக்கட்டுமா சுவாமி!

விப்ர: வேண்டியதில்லை!

சரசா: அக்கா கட்டிக் கொடுத்தா வாங்கிக்கிடுவாரோ என்னமோ?

(விப்ர நாராயணர் சிரிக்கிறூர்)

ரங்க: இந்த சிரிப்பு ஆயிரம் வராகன் தருமே! நம்ம பட்டணத்தில வச்சி நம்ம தாய் தந்தையர்கள் இருக்கிறூர்களா?

விப்ர: தாய் தந்தையர் இல்லை. அந்த விரதம் தீர்த்துக் கொண்டேன்.

ரங்க: தாசர்களுக்கு ஜீவிதம் செய்ய வேண்டியது கடமை! பெரியவர்களுக்கு ஆசாரம்.

விப்ர: அம்மாதிரி பந்தம் நமக்கு எதுவும் இல்லை!

ரங்க: சம்பாதிச்சாத்தான் வயிறு நிறையணுமா? வயல் மானியங்கள் எந்த ஊரில் உண்டோ?

விப்ர: ஏது மில்லையம்மா!

ரங்க: எல்லாம் மாற்றலாய் எங்கே மறைத்து வைத்திருக்கிறீர்கள்? உள்ளதை ஒப்புக் கொண்டால் என்ன! நாங்க உள்ளவங்கதான அதனுலே சொல்லுங்களேன்.

விப்ர: என்னிடம் ஏதும் இல்லையே!

ரங்க: என்னோட விளையாட பார்க்கிறீங்களே! என்னோட கோபம் வினபாபம்!

விப்ர: அசத்தியம் ஆடவேண்டிய அவசிய மில்லை. நான் பேசிய எதுவுமே நிஜம்.

ரங்க: இந்த சனியனை வெளியே விரட்டு. எழுந்திரய்யா எழுந்திரு !

விப்ர: நான் என்ன செய்தேன் என்று இவ்வளவு கெடுபிடி?

ரங்க: பெண்ணைத் தான் மோசம் செய்த. வீட்டில சுகம் வேற தேடிக்கிட நினைச்சயா?

மதுர: அம்மா! அபச்சாரத்துக்கு ஆளாக்கிட்டயே!

ரங்க: அபச்சாரம் இல்ல ஒண்ணும் இல்ல. சும்மா போறயா இல்ல துடப்பக்கட்டை முறிஞ்சி போகும்.

விப்ர: தேவி....தேவி....

ரங்க: கையில் காசில்லாத முண்டத்துக்கு தேவி தான் குறைச்சல், போடா வெளியே!

விப்ர: நான் வெளியேறுகிறேன். என் ஆசைத் தேவி யில்லாமல் வாழ முடியாது.

ரங்க: அதெல்லாம் நடக்காது!

தேவ: (வந்து) என்பிராணன் என் சுகம் எல்லாம் சுவாமியே அம்மா! அவர் இல்லாமல் என் உயிர்நிற்காதே

ரங்க: மயக்க மருந்து தலைக்கேறிவிட்டதா! இதைக் கேட்டா வெளியிலே சிரிப்பாங்க!

தேவ: தாஸிக்கு பிரேமை இருக்கக் கூடாதா! அவளுக்கு மனசு இல்லையா? மகிமை இல்லையா?

ரங்க: என் பேச்சுக்குக் குறுக்கே நிற்கக் கூடாது. என் சொல்லைத் தப்பி நடக்கக் கூடாது.

தேவ: அவரை சேவியம்மா நம் பாவம் தொலைந்து விடும். நம் ஜென்மம் கடைத் தேறி விடும்.

ரங்க வெட்டி வேதாந்தத்தை விட்டுப் புத்தி யோடு நடந்து கொள்!

தேவ: இவரை விட்டு ஒரு விநாடிகூட இருக்க முடியாது.

ரங்க: என் வயிற்றிலே பிறந்து எனக்கே புத்தி சொல்றயா? அவனுக்கு ஞானம் இருந்தால் உன் முகத் திலே விழிப்பானு? உன்னேட இருப்பானு? போடா வெளியே, போடா!

தேவ: அவ்வளவுதானு? என் இஷ்டத்தைக் கவ னித்தாயா? உனக்குப் பணம் தானே பிரதானமாப் போச்சி?

ரங்க: உன் அம்மா குணம் உனக்குத் தெரியாது!

தேவ: என் வாழ்க்கையைக் கெடுக்காதே! உனக்கு இருதயமே இல்லையா? உன் பண ஆசையால் என் ஜீவிதத்தை நாசமாக்கப் பார்க்கிருயா?

ரங்க: என் கண்முன்னே நீ கண்டபடி நாசமா குறதை பார்த்து நான் சும்மா இருக்கணுமா?

தேவ: புறப்படுங்கள் சுவாமி....போகலாம் புறப் படுங்கள்.

ரங்க: ஒரு அடி எடுத்து வைத்தால் காலை முறிச் சுப்புடுவேன்!

தேவ: என்னைக் கொன்று போட்டாலும் சரி! புறப்படுங்கள் சுவாமி!

ரங்க: இத்தனை நாள் வளர்த்தது வீணுகணுமா போ டா வெளியே! போ...

(பிடித்து வெளியே விப்ரநாரயணரைத் தள்ளிக் கதவை மூடுகிருள்)

விப்ர: தேவி....

தேவ: சுவாமி....சுவாமி...

விப்ர: தேவி...............

(தேவ தேவி வெளியே போக முயலுகிருள்)

ரங்க: சுவாமியாமுல்ல சுவாமி......போடி உள்ள போடி

தேவ: சுவாமி—சுவாமி.........

ரங்க: நீ வெளியே போறத நான் பார்க்கிறேன்? போடி உள்ள போடி.......

தேவ: சுவாமி...சுவாமி......

விப்ர: தேவி....தேவி...

ரங்க: நீ வெளியே போறேன்னு சொன்ன உன்னைப்பாரு!

தேவ: சுவாமி...சுவாமி.......சுவாமி...................

விப்ர: தேவி....தேவி...தேவி........

(தேவ தேவியும் விப்ர நாராயணரும் சோகமாகத் தனித் தனியே இருந்து பாடுகின்றனர்)

(ஸ்ரீ ரெங்கநாதர், கோயிலில் உள்ள பொற்கிண்ணியை எடுத்து ரெங்கராஜன் உருவத்தில் ரெங்கனுயகி இல்லம் வருகிருர்)

ரங்க ராஜு: தேவி...தேவ தேவி...தேவி...தேவ தேவி....தேவ தேவி—தேவி...தேவ தேவி......

(சரசா கதவைத் திறக்க ஓடிவருகிருள்)

ரெங்கனுயகி: என்னத்துக்கடி இந்த ஓட்டம்!

சரசா: கதவைத் திறக்க வாம்மா.

ரெங்கனுயகி: எல்லாத்துக்கும் நான் வந்துட்டேனே! நீ படுத்துக்க!

ரங்க: தேவி...தேவ தேவி......

ரெங்னுயகி: இவன் நாசமாப் போக! தூங்கவிட காட்டேங்கிருனே! அடிச்சி விரட்டினுலும். தலையாட்டி பொம்மையாட்டம் வந்து.......

ரங்க: தேவி...தேவ தேவி.......

ரெங்கனுயகி: குரலே மாத்திரு தெரியாதுன்னு நினைச்சிக் கிட்டியா! காதறுத்த கழுதையாட்டம் எதுக்கு கத்துற? என்ன வேணும்? (கதவைத் திறந்து)

ரங்க: தேவ தேவி வேணும்.

ரெங்கனு: இந்த மூகரக் கட்டைக்கு தேவ தேவி ஒண்ணுதான் குறைச்சல்!

ரங்க: முடியாது! அவசரமா அவளைக் கண்டு கொள்ள வேண்டும்! இது குருநாதர் கட்டளை!

ரங்கனு: யாரு அந்தக் குருநாதர்?

ரங்க: நீ அடிச்சி துரத்தினயே அவர்தான்.

ரெங்கனு: அந்த மூகத்தோட வராம சிஷ்யனை அனுப்பினுரு?

ரங்க: தேடி வந்த சீதையைக் காலால் உதறித் தள்ளுகிருயே!

ரெங்கனு: என்னப்பா இது?

ரங்க: இல்லை! அவர் அவ்வளவு லேசாக இல்லை. அவர் ஒரு பதார்த்தத்தைக் கொடுத்தனுப்பினுர்.

ரெங்கனு: இன்னும் கண்ணுக்குத் தெரியலியே!

ரங்க: திறக்கு முன் பதட்டப் படுகிருயே! பிரிப்பதற்குள் தொந்தரவு கொடுக்கிருயே, அபூர்வ அபரஞ்சி கிண்ணி.இப்போது தெரிந்ததா? பரிசோதித்துக் கொள்.

ரெங்கனு: இத வேறயா பரிசோதிக்கணும்? இத்தனைக்கும் இந்த ஊர்தானே?

ரங்க: நான் எங்கும் இருப்பவன்...

ரெங்கனு: இந்த ஊருல எப்படி கூப்பிடுவாங்க?

ரங்க: எப்படிக் கூப்பிட்டாலும் பேசுகிறேன். தாசனுக்கு தாசன் நான்.

ரெங்கனு: என்ன வெளியே நின்று பேசுறீங்களே! உள்ள வாங்க!

ரங்க: வந்த வேலை ஆயிட்டது. தாசர்களுக்கு தாசன் நான். வாங்கிக் கொண்டாய். என் குருநாதர் எனக்காகக் காத்திருப்பார்!

ரெங்கனு: இத்தனை உபகாரம் செய்து வெறும்னே போறீங்களே! பால் பழமாவது சாப்பிட்டுவிட்டுப் போங்க! குருநாதர் எங்கே யிருக்கிறார்?

ரங்க: இதே இந்த வீதியில் தான். நான் வருகிறேன். எப்போதாவது திரும்பி வருகிறேன்.

(ஸ்ரீ ரெங்க நாதர் போகிறார்)

ரங்க: சரசா....சரசா....தூங்கீட்டியா? மூதேவி... எழுந்திரு...எழுந்திரு! மாமா வீதியிலே இருக்கிறாராம், அக்கா கூப்பிடுறான்னு அழைச்சிட்டு வா! போ....

(தேவ தேவியிடம் ரெங்கனாயகி)

ரெங்கனு: தேவி......தேவி...... தேவி...தேவி.... தேவி......

தேவ: சுவாமி இதோ வருகிறேன் சுவாமி!

ரெங்கனு: எங்கம்மா ... எதுக்கம்மா...அவரே இங்கே வருகிறாராம்.

தேவ: இத்தனை அவமானம் அடைந்தபின் எப்படி வருவார்?

ரெங்கனு: என் பேச்சு நிஜமே! முன்னால சீடனை அனுப்பி பின்னால வந்து கொண்டிருக்கிறாராம்.

(விப்ரநாராயணர் வருகை)

விப்ர: தேவி....

தேவ: வந்தீர்களா சுவாமி. மீண்டும் இந்த வீட்டுக்கு எப்படி வந்தீர்கள்?

ரெங்கனுய: மன்னிக்கணும் சுவாமி! உங்க அருமை தெரிஞ்சிக்கிடாம செய்துட்டேன். கொஞ்சம் தண்ணி கொண்டா!

(பாத பூஜை செய்கிறாள்)

தேவ: எழுந்திருங்கள் சுவாமி! இனி எந்தப் புயல் காற்றும் வராது.....

ரெங்கனு: காலத்துக்கெல்லாம் வாழுற பிரேமையாச் சேன்னு உங்க மனசை பரீட்சை பண்ணினேன். வேற ஒண்ணுமில்ல......நீங்களே ஜெயிச்சீங்க...இங்கேயே இருங்கள். சகுணத்தோட சரியாப் போச்சி.

உள்ள விடுங்க! நான் ஆடுன தெல்லாம் நாடகம். அழைச்சிட்டுப் போங்க! இனிமே என்றும் ஜோடிக் கிளிகள் போல வாழுங்க! அழைச்சிட்டுப் போங்க!

(கோயிலில் கிண்ணம் காணவில்லை என்றவுடன் பட்டர்)

பட்டர்: அடே சீனிவாசா, அடே ரெங்கராஜா அட சிங்காரம் தங்கக் கிண்ணம் காணுமே போச்சேடா!

ஒருவன்: எங்கே போச்சி சாமி?

பட்டர்: மாயமா போச்சேடா!

ஒருவன்: போயி போயி எங்கள கேட்கிறீங்களே! தேவரீர்க்கே தெரியணும்...

மற்றவன்: தலையை மோதிக் கொண்டா?

பட்டர்: எனக்கு ஒண்ணுமே தெரியலீயேடா?

மற்றவன்: தெரியுறதுக்கு என்ன சுவாமி தர்ம கர்த்தாவை தெரிசித்து விபரத்தை முறையிடுவோம்...

(தர்மகர்த்தா மற்றவர்களிடம்)

தர்: அடைத்த கதவு அடைத்தபடி இருக்க கிண்ணி காணுமல் போனது என்பது முழுப் பொய்... நான் நம்ப மாட்டேன்.......

பட்டர்: ஆலயம் முழுவதும் தேடிவிட்டேன். என் மனம் சுத்தம் சுவாமி...

தர்ம: யாருக்கும் தெரியாம எதுவும் நடக்காது உங்களுக் குள்ளயே ஒரு திருடன் இருக்கணும்.......

பட்டர்: யாதும் தெரியாது சுவாமி...

தர்ம: பகவானுடைய சொத்துக்கு நீங்களே பாத் யதை. இன்னும் இரண்டு நாள் தவணை தருகிறேன். கொண்டு வரவில்லை; ராஜ தண்டனை தப்பாது.

(ஓர் புறம்)

ஒருவன்: என்னதான் கடும் பஞ்சம் இருந்தாலும் கிண்ணியவா எடுக்கிறது?

மற்றவன்: யாருக்குக் கடும் பஞ்சம் வந்துருக்கு? நான் பிரம்மச்சாரியாக்கும், யாராவது ரெண்டு பெண் டாட்டிக்காரன் எடுத்திருப்பான்.

ஒருவன்: என்னடா சொன்ன? உன் வண்டவாளம் என் கிட்டே நடக்காது.

மற்றவன்: அட சும்மா இருடா. அதைச் சொல்லி இதைச் சொல்லி என் மேலேயே குற்றத்தைச் சாற்றுறயே!

பட்டர்: இருவரும் சண்டை போடாதீர்கள். சாந்தமாக இருங்கள்!

ஒருவன்: உன் மூஞ்சியில முழிச்சாப் பிரம்மஹத்தி தாண்டா!

மற்றவன்: இனியும் உன் முகத்திலே முழிச்சா பாவதோஷம்தாண்டா!

[சரசா ஒருவனிடம்]

சரசா: சக்கரைப் பொங்கலெங்க?

ஒருவன்: சக்கரைப் பொங்கலுமில்ல சாம்பிராணியுமில்ல! இன்னைக்கியார் முகத்திலே விழிச்சேனோ!

சரசா: அது என்ன வந்தது பாவம்...

ஒருவன்: எல்லாப் பாவமும் சேர்ந்து தங்கக் கிண்ணம்காணம்!

சரசா: தங்கக் கிண்ணமா? ஓ. அதுவா?

ஒருவன்: சொல்லு........உங்க வர்க்கத்துக்கு வந்ததா?

சரசா: எங்க வர்க்கத்துக்கு என்ன? எங்க வீட்டுக்கே வந்தது!

ஒருவன்: என்ன சொல்லு........ரொம்ப சக்கரை பொங்கல்தர்றேன். யார்தந்தா?

சரசா: சொன்னா எங்கம்மா பிராணனை எடுத்துருவா!

ஒருவன்: சொல்லல நம்ம ரெண்டு பேர் பிராணனும் போயிடும். என் பிரணனை அடவுவச்சாகிலும் உன் பிராணனை மீட்டுறேன்.

0 0 0

(பட்டரிடம்)

ஒருவன்: கிடைச்சிருச்சி சாமி• கிடைச்சிருச்சி...

பட்டர்: இவளா?

ஒருவன்: இவ சாட்சி சாமி. விப்ர நாராயண சுவாமி காணிக்கையா அனுப்பினு ராம்......

சரசா: ஆமா சுவாமி அவர் கொடுத்ததை நான் பார்த்தேன்.

பட்டர்: அப்படியா? போயி தர்மகர்த்தாகிட்ட முறையிடுவோம்.

(ரெங்க ராஜு தெருவில் சிலருடன்)

ரெங்க: இந்த பிரபஞ்சத்தில் பயங்கரமானது எது? தெரியுமா?

ஒருவன்: கடும் பசி!

மற்றவன்: சாபம்.......

பிரித: ஆசை.......

ரெங்: இல்ல.......

ஒருவன்: பிறகு என்ன குருதேவ்.......

[சேவகர்களுடன் வரும்போது]

ஒருவன்: அந்த வார்த்தை நான் சொல்லணு முன்னு நினைச்சேன். தேவர் சொன்னதை அப்படியே சொல்றீங்களே!

தர்ம: சீ...திருட்டுப்பயலே, பிடித்துக்கட்டுங்கள்.

ரெங்க: இது என்ன அநியாயம்? நானு?

தர்ம: தங்க கிண்ணத்தை அபகரிக்கிறது ஞாயமா?

ரெங்க: அபகரிச்சேனு? எனக்கு ஒன்னும் தெரியாது.......

தர்ம: எல்லாம் மகா ராஜாகிட்ட சொல்லுங்க!வாங்க!

0 0 0

(சேவகர்கள் வருகை, ரெங்கனுயகி அவர்களிடம்)

ரெங்கனு: யாரது? ஓ...நீங்களா? வாங்க...உள்ள வாங்க...மகா ராஜா வரும்படி உத்தரவிட்டார்.

சேக: இழுத்து வரும்படி ஆஞ்ஞையிட்டார். கிண்ணம் எங்கே?

ரெங்க: உங்க பேச்சி அர்த்தமாகலயே. நானு கிண்ணத்தை எடுத்துக் கொண்டேன்?

சேவ: அர்த்த ராத்திரியில அபகரித்த கிண்ணம் எங்கே?

ரெங்க: மன்னிச்சிடுங்க எங்களப் பார்த்து பொரூமையால யாராவது அப்படிச் சொல்லியிருப்பாங்க சாமியோட பூஜைப்பாத்திரத்தைத் திருடினு சாமி கண்ணைக் கெடுத்துருவாரே!

சேவகன்: கோவிலிலிருந்த கிண்ணம் இங்க! இருக்குன்னு எனக்குத் தெரியும்.

ரங்கனு: என் பேச்சை நம்புங்க! சின்னவங்க பெரியவங்க யார்கிட்டயும் கேளுங்க?

சேவகன்: இது பேச்சோட போற விஷயமில்ல. பிடித்து கம்பத்தில் கட்டுங்கள்.

மதுர: அம்மா... அம்மா... இது என்னம்மா இது?

ரங்கனு: அதிகாரம்....... அதிகாரம்....... நம்ம மேல பொரூமை பட்டு யாரோ இந்த வேலே செய்திருக்காங்க! ரெங்கா ... ரெங்கா .......

சேவகன்: வீட்டு நாலுபுறமும் தேடுங்க!

(சேவகர்கள் பலர் தேட செல்லுகின்றனர்)

சேவகன்: இந்த வாயாடித்தனம் பண்ணினுல் உன் பிராணன் நிற்காது. ஜாக்ரதை...

[கிண்ணியை கண்டெடுத்து]

சேவகன்: இதோ கிண்ணி கிடைத்து விட்டது!

சேவகன்: இல்லே என்றூயே! எப்படி வந்தது? அதா வந்துட்டதா? கடவுள் கொண்டு வந்து போட்டுட்டாரா?

ரெங்க: அதுதானப்பா அதுதான். எங்க குடியை அடியோடு கெடுத்துட்டான்.

சேவகன்: யார் அவன்? எங்கே யிருக்கிறூன்?

ரெங்க: நாமக்காரன். விப்ரநாராயணன். புறக்கடையிலிருக்கான்.

சேவகன்: [விப்ரநாராயணரை] பிடித்துக்கட்டுங்கள்.

தேவ: என்ன அநியாயம்?

சேவ: செய்த குற்றத்திற்கு தண்டனை!கை இரண்டையும் பின்னால் கட்டுங்கள்.

தேவ: என் சுவாமியை கட்டாதீர்கள். அவர் பரம பக்தர். என்ன குற்றம் செய்தார்?

சேவகர்: திருட்டுத்தனம். ரெங்கநாதர் தங்ககிண்ணத்தை அபகரித்தார்......

தேவ: இது அநியாயம்...அநியாயம்...அநியாயம்... என் சுவாமி திருடவே மாட்டார்...

சேவகன்: ராஜகட்டளையை விரோதிக்கிறாயா? தேவி?

ரெங்க: நான் எதற்கு?

சேவகன்: அந்த பேச்சை யெல்லாம் ராஜ சபையில் சொல்லுங்கள், இழுத்து வாருங்கள்.

ரெங்க: அம்மா...என் கண்ணே...தேவி.

0 0 0

[ராஜ சபையில் தர்மகர்த்தா]

தர்மகர்த்தா: வணக்கம் சோழ மண்ட உறையூர் ராஜாதி ராஜரே! வணக்கம். விப்ரநாராயணர் தன்வசமாக்கி சிஷ்யையாக ஏற்றுக் கொண்டுள்ளார். பிரிய நாயகி பக்தனுக வேசி வீட்டுக்கே போனார். தாய் விரட்டவும் காணிக்கையாக இப்பொற் பாத்திரத்தை கோயிலில் திருடி காணிக்கையாக அனுப்பினார்!

மன்னர்: தர்மாதிகாரியின் குற்றச் சாட்டுக்கு என்ன சமாதானம் சொல்லுகிறாய்?

விப்ர: நான் ஒரு தவறும் செய்யவில்லை.

மன்னர்: சுவாமி பூஜை பாத்திரத்தைத் திருடினாயா?

விப்ர: இல்லை....

மன்னர்: தங்கக் கிண்ணம் தாசி வீட்டுக்கு வர காரணம்?

விப்ர: எனக்கு தெரியாது!

தர்மாதி: தங்கக் கிண்ணம் எப்படி வந்தது மன்னரிடம் முறையிட்டுக்கொள்.

ரெங்கனுய: பிரபு முன் பொய் சொல்வேனு. இந்த வேஷதாரி என் மகளுடன் வீட்டுக்கு வந்தான்! நான் அடித்து விரட்டினேன். பின் தன் தாசனிடம் அதைக் கொடுத்து அனுப்பினர். பின் துளசி மாலை மாய வேஷத்துடன் பின்னுலேயே வந்துவிட்டார்.

தேவ: அம்மா சொல்வது வெறும் கற்பனை!

தர்மா: இது ராஜ சபை! உன்னைக் கேட்டபோது தான் சொல்லனும். இந்தப் பாத்திரம் கொண்டு வந்தவனை அடையாளம் காட்ட முடியுமா?

ரெங்கனு: இதோ இந்த குரங்கு மூஞ்சிதான்.

ரங்கராஜீ: நீதான் குரங்கு மூஞ்சி...

தர்ம: நீ அவர் சிஷ்யன் தானே?

ரங்க: ஆமாம்.

தர்ம: நீ தினம் கோவில் போவதுண்டா?

ரங்க: ஆமாம்!

தர்ம: சுவாமிதானே இதை எடுத்து வரச் சொன்னுர்?

ரங்க: அந்த வேலை நான் செய்ய முடியுமா? சுவாமிதான் செய்வாரா?

தர்ம: சுவாமியின் மீது கொண்ட கௌரவத்தால் நீ தண்டனையடையாதே ரங்க ராஜா.......

ரங்க: அந்த சிரங்கன் சாட்சியாக சுவாமியின் சாட்சியாக அன்று ஆஸ்ரமத்தில் பிரிந்தவர்கள் மீண்டும் இன்றுதான் ஒன்றுசேர்ந்தோம்.

தர்ம: இவன் என்ருவது உங்கள் வீட்டுக்கு வந்ததுண்டா?

சரசா: ஆம்.......

ரங்க: நானு?

தர்ம: பிரபு......சாட்சிகளின் வாக்குமூலத்தைக் கேட்டீர்கள். நீதிப்படி தீர்ப்பளியுங்கள்.

மன்னர்: உன் பிரபு நிர்தோஷி என வாதிக்கிரூயா?

தேவ: என் பிரபு பரம பக்தர். இதெல்லாம் வெறும் கற்பனே.

மன்னர்: ரங்கனின் சேவையை விட்டு தாசியின் தாசஞனது கூட கற்பனேயா?

தேவ: அதற்கு அவர் பொருட்டல்ல... கபடமாக அவரை வந்தடைந்து நான்தான் அவரை அனுபவித்தேன்.

மன்னர்: உன் மேலுள்ள ஞாபகத்தால் ஆஸ்ரம வாசி தாசி வீட்டுக்குப் போவது தோஷமாகாதா?

தேவ: அதுவும் என் குற்றமே: அவரை அவர் மனதை நான் தேடிக்கொண்டேன். என் பிரபு தனியே இருக்க மனமில்லாமல் என் பின்னே வந்து விட்டார்.

மன்னர்: உன் மீதுள்ள பாசத்தால் கிண்ணத்தைத் திருடி சிஷ்யன் மூலம் அனுப்பிய தாக சந்தேகிக்கிரேூம்.

தேவ: சுவாமி ஒன்றுமே அறியாதவர். அவர் கோயில் உள் நுழைந்ததையோ திருடியதையோ யாரும் பார்த்தார்களா?

மன்னர்: கிடையாது....இந்த கைதிகளின் வாக்கு மூலத்தை கேட்டீர்கள். உங்கள் தீர்ப்பை கேட்கிரேூம்.

ஒருவர்: பதிதனுக்கு பாவ புண்ணியம் தேவை. காம மோகம் உள்ளவன் எதற்கும் துணிவான்.

மன்னர்: பதியின் வார்த்தைக்கு பக்கத்துணேயாக இருந்ததால் தேவியை நிரபராதியாகக் கருதுகிறேன்! திருட்டு சொத்து என்று தெரியாமல் பெற்றுக் கொண்டதால் ரெங்கநாயகியை நிரபராதியாகவும், குருவின் நேராக கொண்டு நடந்ததால் ரங்க ராஜுவையும் நிரபராதி என்று தீர்ப்பளிக்கிறேன். விப்ரநாராயணர் பிரமச்சாரி. மண்டலம் புகழப் பெருமையடைந்தார். மிகுந்த பக்திமான். சந்தோஷித்தோம். எம் எண்ணத்தில் மண்ணேத் தூவினர். பக்தியில் நம்பிக்கை யிழக்கச்

செய்தார். ரெங்கநாதனுக்கே துரோகம் செய்த அவர் இரு கரங்களைத் துண்டிக்க வேண்டும் என்பதே என் கட்டளை.

விப்ர: என்னைத் தண்டிக்க வேண்டியதே! பாவி... துரோகி...குல தெய்வத்தை மறந்துவிட்டேன். வீண் கௌரவத்தால் காலால் எட்டி உதைத்தேன். காதலை நம்பினேன். நீதி மன்றத்திலே நிற்ககூட துணிந்தேன். பல ஜென்மம் எடுத்து ஜென்மத்திற்கு ஜென்மம் சித்ர வதை செய்தாலும் பவித்திரம் அடையாது. இத்தகைய அபச்சாரம் எவருமே எங்குமே செய்யாது தண்டியுங்கள். ரெங்கா... ஸ்ரீரெங்கா... ஸ்ரீரெங்கா......

தேவ: பிரபு...பிரபு...மீண்டும் ஆலோசியுங்கள். கருணாமூர்த்தி...தர்ம ரட்சகரே. உண்மையில் இந்தக் குற்றம் அவர் செய்யவில்லை.

மன்னர்: அபிமானத்துக்கு ஆசைக்கு நீதி மன்றத்திலே இடம் கிடையாதம்மா. தர்மம் குற்றவாளி என்று தீர்மானித்த பின் தண்டனை நிறைவேறியே ஆகும்.......

* *

(விப்ரநாராயணரை வண்டியில் அழைத்துச் செல்லும்போது)

தேவ: நிறுத்துங்கள். இந்த அநியாயத்தை நிறுத்துங்கள். மகா ஜனங்களே! நிங்களாவது என் சுவாமியை விடுதலை செய்யுங்கள்.

விப்ர: தண்டனை இல்லை! இது தன்யனாகும் மார்க்கம்....

தேவ: தங்களைப் பிரிந்து நான் எப்படி வாழ்வேன் சுவாமி?

விப்ர: அரங்கநாதன் அருள் புரியட்டும்.

* *

(மன்னரிடம் தேவ தேவி சென்று)

தேவ: பிரபு...பிரபு...உண்மையாக என் சுவாமி குற்றம் செய்யவில்லை...மீண்டும் ஆலோசனை செய்யுங்

கள். தண்டனையை நிறைவேற்றுதீர்கள். கருணை காட்டுங்கள். பக்தருக்கு அபச்சாரம் செய்ய வேண்டாம் பிரபு! என் சுவாமியின்மேல் ஒரு குற்றமும் இல்லை. இந்தப் பாவியைக் கொல்லுங்கள்.

*　　　　*

(தெருவில்)

தேவ: சுவாமி......சுவாமி......சுவாமி......

*　　　　*

(கொலைக் களத்தில்)

(கைகளை வெட்ட கொடும் வாள் உயர்ந்த மாலையாக மாறுகிறது)

ஸ்ரீரெங்க: (பின்னணி) விப்ரநாரயணர் பரம பக்தர்...பரிசுத்தர். நந்தனருளான் பிறந்தான் மனித இனத்தில். தேவ தேவி காந்தர்வ கன்னிகையே! அவள் பூர்வ ஜன்மத்திலே தோன்றிய பூர்வ விதிப் பயனுல் பூலோகத்திலே பிறந்தாள். நானே இருவரையும் சம்பந்தப் படுத்தி சிஷ்யை ரூபத்தில் தோன்றச் செய்தேன். பொற் கிண்ணத்தை நானே எடுத்து ரங்க ராஜ் உருவத்தில் தாசி வீடு கொண்டு சென்று கொடுத்தேன். விப்ரநாராயணன் தொண்டர்க்கு அடியேனுக விளங்கி பின் என் பக்கம் மாலையாக வந்தடைவான்!

விப்ர: தண்யனுனேன் சுவாமி தண்யனுனேன்.

[விப்ரநாராயணு தேவ தேவி கோரஸ்]

(விப்ரநாராயணர் மாலையாக ஸ்ரீரங்கநாதர் கழுத்தை அலங்கரிக்கிருர், தேவ தேவி மறைகிருள்)

சுபம்

# விப்ரநாராயணு பாட்டுகள்

---

## விப்ரநாராயணு

ஆதவன் எழுந்தான் ஆருயிரே என் மாதவா நீ பள்ளி
[எழுந்தருளாயே
மாசற்ற உதயத்தில் பாலபாஸ்கரனும்
உலகெங்கும் ஒளிவீசி விரைவோடு வருவான்
விரிதேனை வாரிடும் மலர்த்தும்பி எல்லாம்
தேனுண்டு இசைபாடி, வானிலே திரியும்
அள்ளி அள்ளி வீசும் முல்லையின் தென்றல்
வேளையீதே வேளை காலைப் பூசனைக்கே
மாதவா ஸ்ரீரங்க—மாதவா ஐயா,
மாதவா ரங்கா எமைப் பாலிக்க வாராய்
பரிமள திரவியங்கள், பலவித மலர்க்குவியல், கையிலே
[ஏந்தியே,
காமதேனதுடன், கண்ணுடி சேவைக்கு, மகரிஷி மாதவரும்
புது இசைபாட, தும்புரு, உன் சேவை காணவே வாசலில்
[நின்ருர்
ஜகமெங்கும் உன் ஜோதி அழகை—ஆனந்தக்கருணையின்
[விழிகாணக் காத்து நின்றதுவே (மா)
தேவா தேவா நினை, பூசனை செய்யுமிச்சிறு
தொண்டரடிப்பொடி மகிழ—
நேசதயை காட்டி, செல்வனே நீ உன்
செந்திருவிழி கருணும்ருதம் தாராயோ (மா)

## தேவதேவி

வாராய் என் ஸ்வாமி வாராய்
வாராய் அன்பாக வீண்வேஷம் ஏன் இன்னும்
வாராய் என் ஸ்வாமி வாராய் (வா)
அந்தி வேளையில் ஆண்டவா உந்தன்
அன்பை எண்ணியே அபலை வாடினேன்

சிந்தை ஏங்கிச் செம்பாகாய் வேகுதே
எந்தனை மறவாதே மன்னா வா வா (வா)
கோடி செல்வங்கள் குவியல் வந்தாலும் கோபாலா உன்
[பிரேமை மாறுமா
ஓடிவா எந்தன் கண்ணனே நீ வா
உந்தன் சேல்விழி நானே வேண்டினேன். (வா)

## தேவதேவி

இறைவா கண்ணா நீ வா
நாயகனே ஜயகீதா ராதா (நா)
சிந்தையில் சஞ்சலம் மிஞ்சுது உளமது வெந்திடுதே
[என் தேகம்
வேனில் இரவின்மதி வீசும் அழகில் மதி கலையுது மதன
[சங்கீதம் (நா)
குளிர்முகில் ஒளியினில் உன்முக பிம்ப விநோத கலா
[ரமணீயம்
பரம உன் தவவிழி இன்ப சுகோதயம், சரோஜதளம்—
[ரஸஜாலம்
பரிமளமிகுமலர் திருவருள் பாதனை அடைவதுவே
[பசியாகும்
தவமருள் நேசனின் குழலிசை-ஓசையில் தணிந்திடுதே
என்தாகம் (நா)
கிருஷ்ணா-எனதிறைவா கண்ணா.

## தேவதேவி

இதே உன் நியாயமா அந்தோ பரிகாசமா பிரபூ
கனவானதா என் ஆசை கானலா—தனியாகினேனே என்
[முறை வீண் போகுமா?
தேவா என்மேல் தயை செய்யலாகாதா வேதனை தாளேனே
ஏழையின் மேலே இந்த சன்யாசி திருவுளமிரங்காதோ
ஊரெனைப்பாவி விலைமாதெனவே ஏசுதென் செய்வேனே
(தேவா)

லோகத்திலே நான் துணையிழந்தேனே நம்பியபேதையின்
[குறையிதுவா

சோகமுமாகி, வேகமும் மீறி, தாவுதே மனதில்
செய்த நல் ஆணை போகுமே ஆனல் நானென்ன
[செய்வேனே (தேவா)

விண்ணும் மண்ணும் எதிரியானதே
வுதிரிம் மதியும் மடியலானதே
வீணை மோதி உடையலானதே
வேகும் மனதும் உருகலானதா?
ரங்கா... ரங்கா... ரங்கா... ரங்கா...

## விப்ரநாராயண

யோகமதே எழிலாம் கண்ணன் (யோக)
பிருந்தாவனத்தில் நந்தகுமாரன் விந்தையுடன் தானடும்
[லீலை (யோ)

முரளி கிருஷ்ணனின் மோகன கீதத்தில் பரவசமானது
[உலகமெலாம்

விண்மலர்க் கண்ணனின் இன்னிசை மழையினில்
வனமலர் பொழியும் வளரும் நிலவினில் தூங்கிடும் யமுனை
(யோ)

நாட்டிய தாரகை நடுவில் முராரி நாதன் நடுவே நளின
[ஒய்யாரி

தான் தனியாகிலும், தலைக்கொரு தோழனுய் மனதினில்
[தோன்றும் ராதா மாதவன் மாயா—நடனம் (யோ)

## தேவதேவி

அந்தி வேளை சோலை மேவி, சிந்துதேனே வேதனை
சிந்தை வேக, சிறுதேன் சொல், புனிதனே நீ தபோதன
(அந்தி)

வண்ணமின்னும் சின்னமயில் வீணில் வாடும்
சொந்தமாக என்னைப்பார்க்கும் இதனைக் காணும்

என்னே விநோதம் ஈசன் லீலை, கண்காணுங்கனவா
[காதல்தானோ (அ)

அந்தரத்தில் இன்பமில்லை—ஆசைநேசா
புதியகோயில் இந்தராணி, புனித தேவா
அழகான ராஜா—அருகில் வாராய்—ஆனந்தமிதுவே
[அள்ளிக் கொள்வாய் (அங்)

## விப்ரநாராயணா-தேவதேவி

வி:—மலரின் மதுவெல்லாம் இன்னிசைதானே
தே:—மதுர கவிதையின் விந்தையிதே (மலரின்)
வி:—நல்லொளி வெண்ணிலா வீணே மதியினை கொள்ளை
[கொள்வதேன் தேவி
தே:—ஸ்வாமியின் ஜோதியின் முன்னால், மனமகிழ்ந்தசைந்
[தாளே எ. ராணி (மலரின்)
வி:—இளந்தென்றலில் நடம் செய்திடும் தேன்கொடி,
[எனைக்கவர்வதேன் தேவி
தே:—மண அலங்காரம் செய்யும் சிறு யவ்வன கன்னிகை
[ஸ்வாமி (மலரின்)
தே:—மாதவமென என் ஜீவியமே, பாவமானது ஸ்வாமி
வி:—இவ்வன சோபையே உனதன்பாலே-ஜீவிய மோகன
[கலையானதுவே (மலரின்)

## தேவதேவி

இனி ஆகாத சோகம் ஆனதா மன ஓசைகள் மாய்ந்து
[போனதா (இனி)
நான் மனதாரச் செய்த சேவைகளும், என் பாசங்கள்
[யாவும் தீர்ந்ததா
மனமெல்லாம் வீணானதே—மனமோதுதே இனி நான்
[அனாதையா (இனி)

## விப்ரநாராயணா

குலமும் கலையும் அறிவும் எந்தனைக் குருடன் என்றே
[ஏசிப் பேசினும்
என் நியமங்கள் வீணாய்ப் போயினும்—சகிதோகையே நீ
[என் உலகமே
மனந்தானஞ்சுதே—எனைக்காப்பாற்றி கடைத்தேற்றுவாய்

## ரங்கராஜன்

சொப்பன இன்பத்தில் வீணே மதி தப்பி அழிந்து
[போகாதீர்
அதி ஜாக்கிரதையாய்— ஆசையை அகற்று நீயே மனிதா—
[ஏ—மாறுதே
அழகி என்றாலே பயம் பயம்
அவள் நிழலைக்கண்டாலும் பயம் பயம்
முற்றும் துறந்து யோகம் செய்யும்—முனிராஜர்க்குமபாயம்
அதி பலவான் பெரும் ஆண்மகனை—ஆட்டிவைப்பாளே
[அழகியவள் ஓ, ஆட்டிவைப்பாளே அழகியவள்
கள்ளம் கபடம் ரெண்டும் கண்கள்—கள்ளை மயக்கும்
[மொழிகள்
காதகியாள்—புலிவேங்கை போலவள்—கொல்லும் பாதகி
[ஆசை தகாது (அழகி)

## விப்ரநாராயணா

ரங்கா-காவேரி ரங்கா-ஸ்ரீரங்க ரங்கா
என் மனம் மதி தெய்வமே நீ அறியாததுவா
மாபாவம் எதும் எண்ணி நான் செய்திலேனே
வாதை இதுபோதும், காப்பாற்றவாராய்-ரங்கா
ஸ்ரீரங்க ரங்கா-சுரேந்திராதி ராஜாங்க ரங்கா
ஜெயானந்த வேதாந்த ஆனந்த கீதா
அதீதா-அனந்தா பிரபோ-திவ்ய ரங்கா-அரங்கா
அரங்கா நீ ரத்னங்க-சிங்கார-ஸ்ரீவைஜயந்தியின்மாலா

பிரம்மானந்த ஸ்ரீரங்க நாதா-ஸ்ரீராமா-பரந்தாமா
பூலோக-வைகுண்ட-ஸ்ரீரங்கராஜா
நமஸ்தே-நமஸ்தே-நமஹ

## விப்ரநாராயணு

ரங்கா—ஸ்ரீரங்கா—நான் பிழையறியேன்
நீ தயை செய்தருள்வாயே
தயை செய்தருள்வாய்—ஸ்ரீரங்கா நான் பிழையறியேன்
[ஸ்ரீரங்கா
தெரியேன் வேதபுராண ரகஸ்யம்—தெரியேன் உன்பத
[தாசர்கள் சேவை
தவறி—தவறி—பிறந்தலேவேனே
நிஜமறிந்து உன்னேச்சரணடைந்தேன் ஐயா (தயை)
அலறி நின்ற அந்த யானேயைக் காத்தவா
பரமகிருபாநிதி ஸ்ரீரங்கா
அறுத்தருள்வாய் பவபந்தமெல்லாம்
கருணுகரபரிபாலா—ஸ்ரீரங்கா—ஸ்ரீரங்கா

## விப்ரநாராயணு-தேவதேவி-கோரஸ்

ரங்க ரங்க எனச் சொல்வீரே
ஸ்ரீரங்கனேத் தினமும் பணிவீரே
ஸ்ரீரங்கனேத் தொழுவீர் மனதார,
விரஜா நதியே ஸ்ரீ காவேரி
பரமபதமிது ஸ்ரீரங்கம்
ஸ்ரீரங்கனே பரவாசுதேவனும்
சரண் [illegible] ஒருமே தெய்வம் (ரங்க)




ஸ்ரீமகள் அச்சகம், சென்னை-1